உ

ஸ்ரீ தேவி துணை

திருவேற்காடு

# ஸ்ரீ கிருஷ்ணமாரி

# குறவஞ்சி

இயற்றியவர் : அருட்கவி ஸ்ரீ தேவி கருமாரி தாஸர்

*Thiruverkadu Sri Krishnamari Kuravanji :*

*Tamil Poems in praise of Sri Devi Karumari Amman of Thiruverkadu, by Sri Devi Karumari Dasar*

*Published by Super Power Publications, 21, Sunkurama Chetty Street, Madras-1.—1971*

*Price Rs. 3*




முதல் பதிப்பு 1971

பதிப்புரிமையாளரும் வெளியிடுவோரும்
சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ்
21 சுங்குராமச் செட்டித் தெரு, சென்னை 1



விலை ரூ. 3

சூப்பர் பவர் பிரஸ், சென்னை 1




திருவேற்காடு

ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவேற்காட்டுத் தேவாரம்

பண். பழந்தக்கராகம்

ஒள்ளி துள்ளக் கதிக்காம் இவனொளி
வெள்ளி யான்உறை வேற்காடு
உள்ளி யார்உயர்ந் தாரிவ் வுலகினில்
தெள்ளி யாரவர் தேவரே. 1

ஆடல் நாகம் அசைத்தள வில்லதோர்
வேடம் கொண்டவன் வேற்காடு
பாடி யும்பணிந் தார்இவ் வுலகினில்
சேட ராகிய செல்வரே. 2

பூதம் பாடப் புறங்காட் டிடையாடி
வேத வித்தகன் வேற்காடு
போதும் சாந்தும் புகையும் கொடுத்தவர்க்(கு)
ஏதம் எய்துதல் இல்லையே. 3

ஆழ்க டல்எனக் கங்கை கரந்தவன்
வீழ்ச டையினன் வேற்காடு
தாழ்வு டைமனத் தார்பணிந் தேத்திடப்
பாழ்ப டும்அவர் பாவமே. 4

காட்டி னாலும் அயர்த்திடக் காலனை
வீட்டி னான்உறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஓட்டி னார்வினை ஒல்லையே. 5

தோலி னுல்உடை மேவவல் லான்சுடர்
வேலி னுல்உறை வேற்காடு
நூலி னுற்பணிந் தேத்திட வல்லவர்
மாலி னுர்வினை மாயுமே.

மல்லல் மும்மதில் மாய்தர எய்ததோர்
வில்லி னுன்உறை வேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர் தீர்க்கமே. 7

மூரல் வெண்மதி சூடும் முடியுடை
வீரன் மேவிய வேற்காடு
வார மாய்வழி பாடு நினைந்தவர்
சேர்வர் செய்கழல் திண்ணமே. 8

பரக்கி னுர்படு வெண்டலை யிற்பலி
விரக்கி னுன்உறை வேற் காட்டூர்
அரக்கன் ஆண்மை அடரப்பட்ட டானிறை
நெருக்கி னுனை நினைமினே. 9

மாறி லாமல ரானெடு மாலவன்
வேற லானுறை வேற்காடு
ஊறி லாமொரு யேமொழி யாளழில்
கூறி னுர்க்கில்லை குற்றமே. 10

விண்ட மாம்பொழில் சூழ்திரு வேற்காடு
கண்டு நம்பன் கழல்பேணிச்
சண்பை ஞானசம் பந்தன செந்தமிழ்
கொண்டு பாடக் குணமாமே.

அருணகிரிநாதர் அருளிய

# திருப்புகழ்

ஆலம்போ லெழுநீல மேலங்காய் வரிகோல
மாளம்போர் செயுமாய விழியாலே

ஆரம்பால் தொடைசால ஆலுங்கோ புரவார
ஆடம்பார் குவிநேய முலையாலே

சாலந்தாழ்வுறுமால ஏலங்கோர் பிடியாய
வேளங்கார் துடி நீப இடையாலே

சாரஞ்சார் விலனுய நேகங்கா யமன்மீறு
காலந்தா னுழிவேது உரையாயோ

பாலம்பால் மண நாறு காலங்கே யிறிலாத
மாதம்பா தருசேய வயலூரா

பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர
பாசந்தா திருமாலின் மருகோனே

வேலம்பார் குறமாது மேலும்பார் தருமாதும்
வீறங்கே யிருபாலு முறவீரும்

வேதந்தா வபிராம நாதந்தா வருள்பாவு
வேலங்கா டுறைசீல பெருமாளே

கார்ச்சார்குழ லார்விழி யாரயி
லார்ப்பால்மொழி யாரிடை நூலெழு
வார்ச்சாரிள நீர்முலை மாதர்கள் மயலாலே

காழ்க்காதல தாமன மேமிக
வார்க்காமுக னுயுறு சாதக
மாப்பாதக னுமடி யேனை நி னருளாலே

பார்ப்பாயலை யோவடி யாரொடு
சேர்ப்பாயலை யோவுன தாரருள்
கூர்ப்பாயலை யோவுமை யாள்தரு குமரேசா

பார்ப்பாவல ரோதுசொ லால்முது
நீர்ப்பாரினில் மீறிய கீரரை
யார்ப்பாயுன தாமரு ளாலொர்சொ லருள்வாயே

வார்ப்பேரரு ளேபொழி காரண
நேர்ப்பாவச காரண மாமத
ஏற்பாடிக ளேயழி வேயுற அறைகோணு

வாக்காசிவ மாமத மேமிக
ஆக்காதிப யோகம தேயுறு
மாத்தாசிவ பாலகு காவடி யர்கள் வாழ்வே

வேற்காடவல் வேடர்கள் மாமக
ளார்க்காவநன் மாமகி ணுதிரு
**வேற்காடுறை வேதபு ரீசுரர் தருசேயே**

வேட்டார்மக வான்மக ளானவ
ளேட்டார்திரு மாமண வாபொனி
னுட்டார்பெரு வாழ்வென வேவரு பெருமாளே.

# ஆசியுரை

எல்லாம்வல்ல பராசக்தி தனது திருவுள்ளம் கொண்டவாறு அந்தந்த யுகந்தோறும் பல்வேறு திருமேனி கொண்டு பலவேறு திருநாமந்தரித் துப் பற்பல திருவிளையாடல் புரிகிருள் என்பது பாரோர் அறிந்தது.

அகஸ்தியர் வேதமந்த்ரங்களாலும், த்ராவிட ஸ்தோத்திரங்களாலும் புகழ்ந்து வழிபட்ட அன்னை யின் திருநாமம் அகிலமெங்கும் பரவினுல் அனைத் துயிரும் அவள் திருநாம மகிமையை அறிந்து போற்றி வழிபட்டு வரம்பெற்று இன்புறுவர். ஜகன்மாதா ஸ்ரீ தேவி கருமாரி—கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் விளங்குகின்ருள். ஸ்ரீ கிருஷ்ணமாரி என்று வேதங்கள் புகழ்ந்தேத்து கின்றன என்று காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியர் விளக்கியுள்ளார்.

தமிழில் ஸ்ரீ தேவி கருமாரி அம்மனின் பெருமை யைப் பரப்பும் நிமித்தம், மாபெருங் காவியமாய் 7001 செய்யுட்கள் கொண்ட பேரிலக்கியம் திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணம் என்ற பெயரில் இந்நூலாசிரியரால் பாடப் பெற் றது. மேலும் பிள்ளைத்தமிழ், சதகம், குறம் என்ற பல்வேறு இலக்கிய நூல்கள் அவ்வப்போது வெளியிடப்பட்டன. ஸ்ரீ தேவியின் அருள்வாக் கையும், குறத்தின் மாட்சியையும் விளக்கும் "ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி" என்ற இந்நூல் இயல், இசை, நாடகம் மூன்றுங் கலந்த தெய்வத் தமிழ் இலக்கியமாய் வெளிவருகிறது. ஸ்ரீ தேவியின் திருவருள் திறத்தினுல் - திருநீற்றின் சிறப்பால் - இதனை இயற்றிய இந்நூலாசிரியர் ஸ்ரீ அருட்கவி ஸ்ரீ தேவி கருமாரி தாசர் ஸ்ரீ தேவியின் மீது மேலும் பற்பல நூல்கள் இயற்றி ஸ்ரீ தேவியின் பேரருளுக்குப் பாத்திரராகுமாறு பிரார்த்திக் கிறேன்.

இந்நூலிலுள்ள பாடல்களுக்கு இசையமைத்துக் கொடுத்த நீண்டநாளைய முதிர்ந்த அனுபவம் பெற்றபாடலாசிரியர் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் ஸ்ரீ தேவியின் பேரருள் பெற்று இஷ்டசித்தியைப் பெற பிரார்த்திக்கிறேன்.

இந்நூல் வெளியிடும் ''சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ்'' மேலும் பற்பல அருள்நூல்களை வெளியிட தேவி அருள் புரிவாளாக! இந்நூலைக் குறித்த காலத்தில் சிறப்புற அச்சிட்டுக் கொடுத்த சூப்பர் பவர் அச்சகத்திற்கு - சிறப்பாக அச்சகத்தின் மேலாளர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதிக்கும், ஓவியம் வரைந்த ஸ்ரீ சுப்ரமணியம் அவர்களுக்கும் நூல் வெளிவருவதற்குப் பலவகையிலும் ஒத்துழைத்த எல்லா அன்பர்களுக்கும் ஸ்ரீ தேவி அருள்புரிவாளாக!

ஸ்ரீ தேவியின் குறம் - அருள்வாக்கு - செந்தமிழ் மாட்சி இவைகளைச் சிறப்புற விளக்கும் இந்நூல் தமிழ்த்தாய்க்கு அணிகலனெனத் திகழ்ந்து நீடு வாழப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீமத் சுவாமி இராமதாசர்
(தேவி உபாசகர்)

ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்
சுவாமி நடேசனர் நிகேதனம்
சென்னை-1
4-12-71



நற்றமிழ் தந்த ஞானசிரியர்

ஸ்ரீமத் சுவாமி இராமதாஸர்

# திருவேற்காட்டுத் தலச்சிறப்பு

"ஏயுமாறு பல்லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாயனுள் தனியாயின தலைவரைத் தழுவ
ஆயுநான்மறை போற்ற நின்று அருந்தவம்புரியத்
தூயமாதவர் வாழ்கின்ற தொண்டை நன்னாடு"

என்று நாக்கிழாராகிய சேக்கிழார் பெருமானின் பாக்களால் புகழப்பெற்ற தொண்டைவள நன்னாட்டில் முப்பத்திரண்டு சிவத் தலங்கள் உள்ளன. அவைகளில் ஒன்று திருவேற்காடு என்ற திவ்வியத்திருத்தலம். திருஞானசம்பந்தப் பெருமானின் பத்துப் பதிகங்களைப் பெற்றபெருமையுடையது இத்தலம். அறுபான் மூன்று நாயன்மார்களில் ஒருவராகிய மூர்க்கநாயனார் அவதரித்த திருத்தலம். மேலும் கருணைக்கவி அருணகிரியாரின் திருப்புகழால் பாடப்பெற்ற பெருந்தலம்.

வேற்காட்டுத் திருத்தலத்தைக் கேட்டாலும் பெருவினைகள்
விரைந்தோடும் விதியும் மாறும்
வேற்காட்டுத் திருத்தலத்தைக் கண்ணுற்றால் எழுபிறவித்
தீன்பெல்லாம் விரைந்து வீயும்

வேற்காட்டுத் திருத்தலத்தில் நீரருந்தப் பெரும்பிணிகள்
உடனீங்கிப் புனித மோங்கும்
வேற்காட்டுத் திருத்தலத்தில் திருநீற்றை மெய்யணிந்தால்
பேரின்ப மெய்தலாமே.

என்று திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணம் கூறுவதிலிருந்து திருவேற்காட்டின் சிறப்பை அறியலாம். மேலும் ஸ்ரீ பாலசுப்ரமண்யர் வேற்கண்ணம்மையிடத்தில் வேல்பெற்று வேலாயுதத் தீர்த்தம் அமைத்த புனிதத்தலம். வேல்பெற்ற காடு திருவேற்காடு என்பதாம். அன்றியும் வெள்வேல மரங்கள் நிறைந்த காடாதலின் வேலங்காடு எனவும் வழங்கப் பெறும். பாலிநதிக்கரையில் அமைந்த புனிதத் திருத்தலம்.

வேற்கண்ணம்மை சமேத (பாலாம்பிகை) வேதபுரீசர் திருமணக் கோலத்துடன் அகத்தியர்க்குக் காட்சியளித்த புனிதத்தலம்.

வேற்கண்ணம்மை, தானே தனது இச்சா மாத்திரத்தால் அந்தரி, வானத்தி, பார்ப்பனி, காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, கருமாரி ஆகிய எழுசத்திகளாகித் திரிசூலம் நாட்டி, எழுவரில் இளைய கருமாரி ஈருருவாய் அமர்ந்து திருநீற்றினால் ஐந்து தொழிலையும் புரிந்து வரும் திருத்தலம். ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புற்றில் கரு நாக வடிவாயிருந்து வெகுகாலம் அருளாட்சி புரிந்துவருபவளாதலின் இன்றும் கொடிய விஷநாகந் தீண்டினால் விஷம் ஏருத பெருமை யுடைய திருத்தலம்.

இத்தலத்தில் உள்ள ஸ்ரீ தேவி கருமாரி அம்மனின் முடிமீது உத்தராயணத்தின் மூன்றும் மாதமாகிய பங்குனி மாதத்திலும் தக்ஷிணாயனத்தின் மூன்றும் மாதமாகிய புரட்டாசி மாதத்திலும் முதல் வாரங்களில் சூரியன் ஒளிபடும் பெருமையுடையது.

அகஸ்தியர் ஸ்ரீ தேவியை, குண்டலியாகவும், வாலையாகவும் பார்வதியாகவும், ஸ்ரீ தேவி கருமாரியாகவும் கண்டுதரிசித்த புனித க்ஷேத்திரம்.

சித்தர்களும் யோகர்களும் எப்போதும் கூடி ஞானத்தால் மகிழும் இடம். பாலிநதியாலும், செந்நெல்வயலாலும் சூழப் பெற்ற பெருமையுடையது. இந்த ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் - ஸ்ரீ கிருஷ்ணமாரி என வேதங்களில் வழங்கப்படுகிருள் என்பதை உல குக்கு உணர்த்திய காஞ்சிகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ. சங்க ராச்சார்ய ஸ்வாமிகள் சில தடவை இங்கு விஜயம் செய்து "அன்னை யின் நாமம் அகிலமெங்கும் பரவும்" விபூதி மகிமை க்ஷேத்திரம்" என்றெல்லாம் புகழ்ந்த திருத்தலம்.

வேதமந்திரங்களாலும் த்ராவிட ஸ்தோத்திரங்களாலும் அகஸ்தி யர் ஸ்ரீ தேவியை வழிபட்ட முறையைப் பின்பற்றி, இந்த நூலிலும் ஆங்காங்கே கவிவாக்கு அமைந்துள்ளதை அன்பர்கள் அனுபவிப்பார்கள்.

வாழ்க தேவி திருநாமம்! வளர்க திருநீற்றின் மாட்சி!

# நூலாசிரியர் முன்னுரை

## அருட்கவி ஸ்ரீ தேவி கருமாரி தாசர்

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி தெய்வநெறியை வளர்க்கும் மொழியாம். தெய்வங்களே தமிழை ஆய்த்தன.

"கண்ணுதற் பெருங் கடவுளுங் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த பசுந்தமிழ்",

என்றார் பரஞ்சோதியாரும்.

காலந்தோறும், வளர்ச்சி பெற்று அவ்வக்காலத்துக்குத் தகுந் தாற்போல மக்களால் ஏற்றுக் கொள்ளத் தக்க வகையில் மக்கட்கு வேண்டும் உண்மைகளையுணர்த்தும் இயற்கை நெறி நல்வழிகளைக் கொண்டு விளங்கும் இலக்கியங்கள், பேரிலக்கியங்கள். சிற்றிலக் கியங்கள் என இரு வகைப்படும்.

சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும். அவைகளில் பள்ளு, குறம் என்பன பள்ளர், குறவர் நிலையை விளக்கிப்பாடி முடியும் ஆதலின் அவைகள் நாடகமாக நடிக்கும் நிலைபெற்றன.

குறம் என்பது குறவஞ்சி-குறவஞ்சி என்றால் குறப்பெண் என்று பொருளாகும். குறத்தி வாழ்வது குறிஞ்சி நிலம் ஆதலின் குறிஞ்சி நிலத்தியல்பையும் மக்களின் வாழ் நிலையையும் உணர்த்திப் பாடுதல் முறைமை.

குறவஞ்சி இலக்கணம்: குறவஞ்சி நூல்களுள் ஒரு தலைவனோ கடவுளோ உலாவருவர். அவ்வுலாக்காண்பதற்குப் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை அரிவை, தெரிவை பேரிளம்பெண் ஆகிய எழுவகைப் பெண்பாலரும் வருவர். எழில்நலம் அமைந்த ஏந்திழை ஒருத்தி உலாவந்த உத்தமனைக் காதலிப்பாள். கங்குகரை யற்ற காதல் மயக்கத்தில் ஈடுபடுவாள். தலைவன் கிட்டாமையால் இருக்கை சேர்வாள். இருக்கை சேர்ந்து இதயத்துடிப்பினால் வருந்து வாள். தோழியர் கண்டு உபசரிப்பர்; தேற்றுவர். அதிலும் தெளி யாது வருந்துவள். அந்நிலையில் குறத்தி ஒருத்தி வருதலும் கைக்குறி பார்த்து அவள் காதலித்த தலைவனே கணவனாக வருவான் என்று கூறும் பகுதி சிறப்புப் பகுதி யாதலின் "குறவஞ்சி" எனப் பெயரிட்ட

னர். இறையனார் அகப்பொருள், 'களவியல்' என்பதும் இச்சிறப்புப் பற்றி என்க.

இவ்வகையில் திருக்குற்றாலக் குறவஞ்சி, கொடுமளூர்க் குறவஞ்சி, சரபேந்திரபூபால குறவஞ்சி நாடகம் முதலிய நூல்கள் சந்த வண்ணப்பாக்களாலும், விருத்தச் செய்யுட்களாலும் இயற்றப் பெற்றவையாய்ச் சொல்லழகும், பொருளழகும் நிறைந்து மனக்கிளர்ச்சியை ஊட்டுவிக்கும்.

மீனாட்சியம்மை குறம் செய்யுட்களால் அமையப்பெற்றதாம். திருக்குற்றாலக் குறவஞ்சிக்குப் பின்னர் கடவுளரைத் தலைவனாகக் கொண்ட குறவஞ்சி நூல்களுள் சில வந்துள்ளன. என்றாலும் திரிகூட ராசப்பக்கவிராயர் பாடியது போன்ற சிறப்பை, அதற்குப்பின் வந்த குறவஞ்சி ஏதும் பெறவில்லை என்பது துணிவு.

இனி திருவேற்காட்டுக் குறவஞ்சியாகிய ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியைக் காண்போம்.

திருவேற்காடு தொண்டைவள நாட்டு முப்பத்திரண்டு சிவத்தலங்களுள் ஒன்றாகும். ஸ்ரீ பாலாம்பிகை சமேத வேதபுரீசன் திருமணத் கோலத்துடன் அகத்தியர்க்குக்காட்சி அளித்த புனிதத்தலம். ஞானசம்பந்தரின் தேவாரமும், அருணகிரியின் திருப்புகழும் சேக்கிழாரின் சிவக்கவியும் பெற்று மூர்க்கரின் அவதாரத்தையும் பெற்ற திருத்தலம்.

வேற்காட்டு ஈசராம் வேதபுரீசர் பவனி விண்ணோரும், மண்ணோரும் கண்டு களிகூறும் பவனி. மாரனைக் கண்ணால் எரித்தருளும் மாண்பு படைத்த மாதேவனின் பவனி - உமையொரு பங்குடையானாகிய உத்தமனின் உயர்பவனி எனின் அதைக் காண்பதற்கு இருகண்கள் போதுமோ?

பவனியைக் கண்டு பக்திப்பரவசத்தில் ஈடுபடுகின்றனர் பக்தர்கள். அருளழகன் திருமேனியழகில் உள்ளத்துணர்வை ஈடுபடுத்தினர் அழகிய இளங்கன்னியர்கள்.

அதில் ஒருத்தி மதனவல்லியாவள்.

மங்கைப்பருவங் கொண்டு தங்கச் சிலையெனத் துங்கமனத்துடன் வருபவள், ஒய்யாரமாக வந்தமர்ந்து பூஞ்சோலையில் மலர் கொய்தாள்; தோழியருடன் கும்மியடித்தாள். சோலையில் விளையாடி சித்திர ஊஞ்சல் அமர்ந்து ஆடினாள். வேற்காட்டுச் சோலையிலிருந்து வெளிவந்த மதனவல்லி சிவனின் திருமேனியைக் கண்டாள்.

வடமறைக் காட்டுச் சோலை வந்தமா் மதனவல்லி
படரொளிப் பசும்பொன் மேனிப் பரமனின் பவனி கண்டாள்
உடற்பொருள் ஆவி எல்லாம் உத்தமன் தனக்கே யாக்கத்
திடமுள முன்த வத்தால் சித்தமும் உருகி நின்றாள்.

என்றபடி மனம் உருகி நின்றாள்.

கண்ட காளையை யாரென்று அறியத் துடித்தபோது தோழியர்கள் வேற்காட்டு ஈசன் எனச் சொல்லினர். வேற்காட்டு நாதனை நினைத்து நெஞ்சம் உருகினாள் மதனவல்லி.

மன்மதன் கணைக்கு இலக்காகிய மதனவல்லியைத் தோழியர் சூழ்ந்து நின்று உபசாரம் பல புரிந்தார்.

நிலவுகண்டு வருந்தி, தென்றலால் துடித்து, மன்மதனை நிந்தித்து மனந்தேறாமல் தொழியர்களுடன் விவாதித்தாள் மதனவல்லி.

தோழியைச் சிவபெருமானிடம் தூது செல்ல வேண்டினாள். இவ்வண்ணமாய்த் துன்புறும் வேளையில் வேற்காட்டு மதனவல்லிக்குக் குறம் கூற வேங்கட மலையிலிருந்து வருகிறாள் குறவஞ்சி.

ஆம்; தேவரும் முனிவரும் போற்ற கோனேரிக்கரையில் நின்றருளும் தேவன், பரமனும் பிரமனும் புகழும் பரந்தாமன், திருமலையில் வாசஞ் செய்யும் சீநிவாசனின் திருநாமத்தைக் கோவிந்தா கோவிந்தா என்று உச்சரிப்பவள். திருநீற்றினால் ஐந்தொழில் புரிந்து திருவேற்காட்டில் அமர்ந்து அருளாட்சி புரியும் ஸ்ரீ கிருஷ்ணமாரியை நினைத்து அருட்குறம் சொல்லும் குறவஞ்சி.

‘திருநீற்று ஒளியுடன் சிந்துரம் சிறந்த’
திருநுதற் செல்வி ஸ்ரீ கிருஷ்ணமாரி

தேவியைப் போற்றும் குறவஞ்சி

‘வெண்மணி செம்மணி நீலக் கருமணி
திண்மணி பச்சைத் திருமணி வளைமணி’

முதலிய பணிகளைச் சிறப்புறப் பூண்ட குறவஞ்சி—மணிக்கூடை இடுப்பிலும், வேம்பிலையும், பிரம்பும் கையிற் பிடித்து வேகமாய் வருகின்றாள்.

நலமுறக் கோத்த ஆரம் பலப்பல
அணிந்து வனப்புற விளங்கு மார்பினாள்
பணியணி துயிலும் பரமனுக் குரிய
சங்காழி இலச்சினை பொறித்த புயத்தினாள்

பொங்கெழில் மணிவடம் பூண்டநுண் ணிடையாள்
மந்திரப் பிரம்பும் வேம்பிலைக் கொத்தும்
தந்திர மியற்றும் மாத்திரைக் கோலும்
எழிலுறும் கரத்தினில் ஏந்தி மகிழ்வோள்
விழுச்சிலம் பொலிக்கும் மென்மலர்ப் பதத்தாள்
அணிபதச் சதங்கை ஆர்ப்புறும் நடையாள்
இணைவிழி நோக்கால் இமையவர் ஏங்க
புருவநன் னெளிவால் புவியோர் மயங்க
முருகு முறுவலால் முனிவரர் கலங்க
மென்குரல் குயிலாள் மயக்கும் ஒயிலாள்
தன்னிக ரின்றித் திருக்குற முறையைப்
பன்னரும் பல்வகைக் குறிகளால் விளக்கி
எண்ணெழு தேயம் எங்கும் சென்று
திண்ணிய வேந்தரால் சீர்புகழ் பெற்று
நண்ணிய மாந்தர் வினவுங் காலை
கைக்குறி மெய்க்குறி விழிக்குறி மொழிக்குறி
மைக்குறி காலம் மூன்றும் உரைகுறி
விரும்பிய துரைக்க வேற்காட்டுத் தேவி
கருமாரி நாமங் கருத்தில் இருத்தி
உண்மைக் குறிவுரை வித்தக வஞ்சி
பண்குற வஞ்சிப் பாவைவந் தனளே.

வேதவனமாகிய வேற்காட்டு வீதியில் வருகின்றுள்! நாட்டு வளமும் மலைவளமும் தங்கள் குடியியல்பும் பாடி வருகின்றுள். திருநீற்றின் பெருமையையும் கிருஷ்ணமாரியையும் பாடுகிறுள்.

"சுட்டதிரு நீறெடுத்து நாற்புறமும் தூவி
இட்டசித்தி பெறச் செய்வோம் எட்டுசித்தும் புரிவோம்
அட்டாட்ட லீலைபுரி தேவி கிருஷ்ணமாரி
அருளாலே முக்காலப் பொருளுரைப்போம் அம்மே!"

என்று பாடிய வண்ணம் வருகிறுள்.

வீதியில் வந்தவளைத் தோழியர் கண்டு வரவேற்கின்றனர்.

குறவஞ்சி திருவிளக்கேற்றி விநாயகர் முதல் தான் வழிபடும் தெய்வம் ஈருக அனைவரையும் சிந்தித்துத் திருக்குறம் - அருள்வாக்கு அருள்கின்றுள்.

உலகிற்கு எல்லா நன்மையைத் தரும் கோவிந்தன் திருநாமம்—குறை நீக்கி நிறைவாக்கும் கோவிந்தன் திருநாமம்.

அதனை உலகுக்கு உணர்த்தும் வண்ணம் "கோவிந்தா" என்று மூன்று முறை கூறி அருள் வாக்கு உரைக்கின்றாள்.

மதனவல்லியின் மனக்கருத்தறிந்து உரைத்தாள் குறவஞ்சி—ஏற்காமல் வாதாடினாள் மதனவல்லி. தான் நினைந்த தலைவனும் வேதபுரிநாதனின் நாமங்கேட்டு மெய்சிலிர்த்து குறவஞ்சியின் அருள் வாக்கைப் புகழ்ந்தாள்.

கருத்தில் கருதிய நாதனை அடையும் மார்க்கம் யாதெனக் கேட்டாள், மதனவல்லி. கருமாரித் தேவியை வழிபட்டால் கருதியது யாவும் கைகூடும் என்றாள் வஞ்சி. புற்றின் அருகே சென்றாள் பூவையர்சூழ மதனவல்லி.

மஞ்சளும், கனியும் திருநீறும் அங்கு மாட்சிமை தருகின்ற காட்சி மாரியின் மாட்சி!

ஸ்ரீ கிருஷ்ணமாரி காட்சி தருகிறாள். நாகவடிவுடன் தோன்றி நாக நடனம் ஆடினாள். குறவஞ்சியாக வந்த மாதவனின் அருளுரைப்படி வேதபுரீசனை நாதனாக அடைவாய் என்றுரைத்த வேற்காட்டரசி தேவி கருமாரி!

கோவிந்தா கோவிந்தா கோவிந்தா என்றுரைத்து ஒளிவீசக் காட்சியளித்தாள்.

சிவாம்சமாகிய சிங்கன் அன்னை அமர்ந்த பலவேறு தலங்களிலும் சிங்கியைத் தேடி வருகின்றான்.

மேலும் மூலன் நூவன், குளுவன் இவர்களின் விநோதங்கள், சிங்கி-சிங்கன் விவாதம் வேதபுரிநாதன் வாழ்த்து.

இத்துணை அம்சங்களும் பொருந்திய எழில் இலக்கியமாம் ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சியில் தெய்வத் தமிழ் இயல்பாகக் கொஞ்சு சிறது.

ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி உருவாகி வெளிவருவதற்கு அல்லும் பகலும் அன்னையின் அடிமலர் போற்றினார் எனது ஆசார்யன் ஸ்ரீமத் சுவாமி இராமதாசர். அடிகளாரின் வடிவம். அருந்தமிழின் உருவம் அவரது அரிய திருமுகக்காட்சி.

மாயோன் மேய காடுறையுலகம்' என்று ஒல்காப்புகழுடைத் தொல்காப்பியன் மாயனை முன் வைத்துப் பாடினார். திருமால் நெறியை விளக்கும் திருமண் துலங்கும் திருநுதலும் கருணைபொழியும் இருகண்களும் என் கருத்திலேயே என்றும் மிளிரும் காட்சி.

முந்நூறு ஆண்டுகட்கு முன் தென்பாண்டி நாட்டைத் தமிழ் மதுரையிலிருந்து ஆட்சி புரிந்த ஸ்ரீ முத்துவிசயரங்க சொக்கநாத நாயக்கர்-திரிகூட ராசப்பக் கவிராயரைக் கொண்டு திருக்குற்றுலக் குறவஞ்சியைப் பாடவைத்தனர்-பாராட்டினர்.

இன்று சிவராஜபோகனுய் தவராஜ ராஜனுய் அமர்ந்து அடியேனைப் பாடும்படி ஆக்ஞாபித்தார் தவராஜர் **ஸ்ரீமத் சுவாமி இராமதாஸர்.** நாடக உலகில் வெளிக்கொணர்ந்தார். நற்புகழ் அளிக்கும் **கருமாரிதாசர்** என்று அடியேனுக்கு தீக்ஷா திருநாமம் வழங்கிச் சிறப்பித்த பரமாசார்யன் வாழி!

அருந்தவச்சீலர் **ஸ்ரீமத் சுவாமீ இராமதாசரின்** முடியமர்ந்து அன்னை அருள் வாக்குரைக்கிருள்.

சென்னை ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் சுவாமி நடேசனுர் நிகேதனம் (105, ஷண்முகராயன் தெரு, சென்னை 1) அப்பாக்கியத்தைப் பெற்றுள்ளது.

தீராவினைகளைத் தீர்க்க திருக்குறம் உரைக்கும் அருட்செல்வி எனது கண்கண்ட தெய்வம்-கலிதீர்த்த கலிமாரி-கருமாரி - கிருஷ்ண மாரி - எனக்குப் பவந்தீர்த்தமாரி-பைந்தமிழைத் திருநீற்றுல் அருள் புரிந்த கருமாரி அன்னையின் முன்னிலையில் அரங்கேற்றப் பெற்ற அருள் நூல்.

பற்பல திருத்தங்கள் அன்னை சொன்ன வண்ணம் அவ்வப்போது திருத்தஞ் செய்யப்பட்டது. தேவி திருவுளங் கொண்டு அருள் புரிந்தாள்

ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி இசை நாடக நூலை, ஆந்திர மாநிலத்திட் கார்வெட்நகரில் தாமரைத் தடாகத்தில் வருகை தந்திருந்தபோது **ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியர்** அவர்களிடம், எனது ஞானுசிரியர் **ஸ்ரீமத் சுவாமி இராமதாசரும்** அடியேனும் சென்று சமர்ப்பித்தோம். அப்பொழுது அந்நூலை வாசித்தபோது **ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகள்** தமது ஆசி அனுக்ரஹத்தை அளித்தனர்.

**திருவேங்கடமலைவாழ் குறவஞ்சி - திருவேற்காட்டுக் குறவஞ்சி - ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி நூல், தெய்வத்தமிழ் இலக்கிய மாலையில் ஒரு மலராக விளங்குவதாக.**

---

உ

ஸ்ரீ தேவி துணை

## விநாயகர்

நீர்கொண்ட சடையோன் உள்ளம்
நித்தமும் களிக்கச் செய்வோன்
நேர்கொண்ட மேரு வெற்பில்
நெடிய மால்கதைவ ரைந்தோன்
ஏர்கொண்ட இபமு கத்தோன்
எழில்மலர்ப் பாதம் போற்றி
சீர்கொண்ட திருவேற் காட்டுக்
குறவஞ்சி சாற்று வேனே. 1

**கருத்து:** கங்கையைத் தலையில் தரித்த சிவபெருமான் உள்ளம் மகிழும் வண்ணம் நாடோறும் ஆடல் புரிபவன்; உலகத்திலேயே உன்னத மேருமலையில் சிறந்த திருமாலின் கதையாகிய மஹா பாரதத்தை எழுதியவன்; இயற்கையழகு பொருந்திய யானைமுகப் பெருமானின் அழகிய மலர் போன்ற பாதங்களைப் போற்றி மேன்மை மிகுந்த திருவேற்காட்டுக் குறவஞ்சி நூலைச் சொல்லப் புகுவேன் என்றவாறு.

**விசேடவுரை:** நீர் என்ற மங்கலச் சொல் கங்கையைக் குறிப்ப தாகும். ஐம்பூதங்களில் ஒன்றான நீரை வைத்துப் பாடியது ஐம் பூதங்கள் நிலைபெறும் வரை நிலைக்கும் நூல் என்றது கருத்து. 'கங்கையைச் சடையில் பரித்து' என்று அத்தியாச்சிரம சுத்தாத்து வித வைதிக சைவசித்தாந்த ஞானபானுவாகிய பாம்பன் சுவாமிகள் தொடங்கியதும் கருதத்தக்கது.

மால்கதை - ஸ்ரீ கிருஷ்ணன் சாகசம் புரியும் மாபாரதக்கதை - சிவபெருமானின் உள்ளத்தைக் களிக்கச் செய்பவனும் திருமாலின் கதையை வரைந்தவனும் என்றபடியால் சைவ வைணவ ஒற்றுமையை வலியுறுத்தும் குறவஞ்சி எனப் பெறுவதாம்.

திருவேற்காட்டுக் குறவஞ்சி என்பது திருவேற்காட்டில் திருக் கோயில் கொண்டுள்ள (ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்) ஸ்ரீ கிருஷ்ண மாரியை உபாசிக்கும் குறவஞ்சி என்பதாம்.

ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் - வேத ஆகம மந்த்ரங்களில் ஸ்ரீ கிருஷ்ணமாரி என்று வழங்கப்படுகிறது என்று காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்யர் குறித்தது கருதத்தக்கது. 'நீர் கொண்ட சடை யோன்' என்று சிவபெருமானை முதற்கண் குறிப்பிட்டது 'வேதபுரி நாதர்' பவனியிலிருந்து நூல் சிறப்புறுவதால் என்க.

நீர் - கங்கை. சத்தியை முன் வைத்துப் பாடுவதால் சக்தி ப்ரபாவத்தை உணர்த்தும் நூல் என்று உணர்த்தியதாம்.

சிவன் மேனியில் பூத்த திருநீற்றினுல் ஐந்தொழில் புரியும் ஸ்ரீ தேவி கருமாரி, தானே சிவனுகி விளங்கும் தன்மையையுணர்த்த சிவனை வழிபட்டது என்பதுமாம்.

எடுத்துக்கொண்ட நூல் இனிதாகநிறைவேற கடவுள் வாழ்த்துக் கூறுதல் இலக்கண மரபு. விநாயகப் பெருமானை வழிபட்டால் குறையின்றி நிறைவேறும் எனவே விநாயகனை வழிபட்டதாம். தெய்வ வணக்கம் நிறைவேறிய பிறகு, எச்செயலும் எளிதில் முடியும் என்பது பற்றி 'சாற்றுவேன்' என்றதாம். ஏ - அசை.

## பாலசுப்ரமண்யர்

மங்களக் கடம்ப மாலை
 மார்பினில் அணிவோன் பாதம்
சங்கையில் லாம லேத்தித்
 தகுந்திரு நீற ணிந்து
மங்களக் கருமா ரித்தாய்
 மாண்புடன் செங்கோல் ஓச்சும்
துங்கமாம் திருவேற் காட்டுக்
 குறவஞ்சி சொல்லு வேனே. 2

**கருத்து:** எல்லா நன்மையையும் அளிக்கும் கடம்பமாலையை மார்பில் அணிந்த கந்தப்பெருமானின் திருவடிகளை முக்குற்றமும் இல்லாமல் போற்றி, உயர்ந்த திருநீற்றை நெற்றியில் தரித்து மங்கள வடிவமாகிய கருமாரித்தாய் மாட்சிமையுடன் அருட்செங்கோல் செலுத்தும் உயர்ந்த தலமாகிய திருவேற்காட்டில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தேவியை உபாசிக்கும் குறவஞ்சியைச் சொல்லுவேன்.

திருவேற்காட்டுக் குறவஞ்சி என்பது ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி.

## கலைமகள்

வெண்கலை யுடுத்த தேவி
  வெண்மலர் சூடும் செல்வி
வெண்ணூலைக் கரத்தி லேந்தும்
  வாணியின் பாதம் போற்றி
எண்ணெழுத் துணர்த்தி யாளும்
  எழில்திரு நீற ணிந்து
பண்ணுறுந் திருவேற் காட்டுக்
  குறவஞ்சி பாடு வேனே. 3

**கருத்து :** வெள்ளை நிற ஆடையையுடுத்த தேவியாயும், வெள்ளை மலரைச் சூடிய செல்வியாயும், வெண்ணூலைக் கரத்தில் தரித்தவளாயும் விளங்குகின்ற கலைவாணியின் பாதங்களைப் போற்றி, எண், எழுத்து ஆகிய கலைகளை உணர்த்தி, என்னை ஆட்கொண்ட அழகிய திருநீற்றை, அணிந்து இசைக்கலை நிறைந்த திருவேற்காட்டுக் குறவஞ்சி நூலைப் பாடுவேன் என்றவாறு.

**விசேடவுரை :** எண்ணெழுத்துணர்த்தி என்பது கணித்தலாகிய குறவஞ்சி நூலை யுணர்த்தி என்னை ஆட்கொண்ட திருநீறு என்றுலும் பொருந்தும்.

திருநீறே உணர்த்தும் கலையானதால் அருட்கலை என்றவாறு.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு".

என்றார் முன்னோர் ;

திருநீறே மெய்க்கலை தருவது என்றதால் எண்ணையும் எழுத்தையும் உணர்த்தியாளும் என்றவாறு.

## திருமால்

துளவமா மாலை பூண்டு
  தொழுபவர்க் கருள ளிக்கும்
தளவமா நிலத்தின் தேவைச்
  சக்கரந் தரித்த கோவை
இளகிய மனத்தால் ஏத்தி
  எழிலுறுந் திருவேற் காட்டு
வளக்குற வஞ்சி நூலை
  வகையுறப் பாடு வேனே. 4

**கருத்து :** துளவ மாலையைத் தரித்து தன்னைத் தொழுகின்றவர்க்கு அருளை அளிக்கும் முல்லை நிலக் கடவுளை, சக்கரந் தரித்த திருமாலை, உருகிய உள்ளத்தால் நினைந்து போற்றி, அழகுமிக்க திருவேற் காட்டை வளப்படுத்தும் குறவஞ்சி நூலை வகை பொருந்தப் பாடுவேன் என்பதாம்.

**விசேடவுரை :** 'துளவமா மாலை பூண்டு' என்றது திருமால் துளவ மாலையைத் தரித்தான் என்பதாம்.

'துளவமா மாலையைப் பூண்டு தொழுபவர்க்கு' என்பது திருமால் அடியார்களும் துளவ மாலையைத் தரிப்பவர் ஆதலின் துளவ மாலையைத் தரித்து தொழுபவர்க்கு என்பதும் பொருந்தும்.

'சக்கரந் தரித்த கோவை' என்பது இனம் பற்றி ஏனைய ஆயுதங் களும் கொள்க!

## வேதபுரீசர்

வேதங்கள் புகழ்ந்தேத்தும் வித்தகனை விடையோனை
வேதவனப் பொழிலில் அன்று
வேதபுரீ சுரராகி வேற்கண்ணி யிடமமர
மாமன்றற் காட்சி தந்து
போதமுறும் அகத்தியர்க்கு அருளீந்த புண்ணியனை
புராந்தகனைப் பணிந்து போற்றி
சீதவயல் சூழ்ந்தோங்கும் வேற்காட்டு குறவஞ்சி
செந்தமிழைச் செப்பு வேனே. 5

**கருத்து :** நான்கு வேதங்களும் புகழ்ந்து போற்றும் வித்தகனை, ரிஷப வாகனத்தின்மீது வருபவனை, உத்தர வேதாரண்யம் என்ற திருவேற் காட்டுச் சோலையில் பூர்வ காலத்தில் வேதபுரீஸ்வரர் என்ற திரு நாமத்துடன் வேற்கண்ணி யிடப்பக்கத்தில் விளங்கவும் ஒப்பற்ற திருமணக்கோலக் காட்சி தந்து, ஞானத்தில் சிறந்த அகத்தியருக்கு அருளளித்த புண்ணியனை, புராந்தகனைப் பணிந்து போற்றி குளிர்ந்த (நீர் வளம் மிக்க) வயல்கள் சூழ்ந்து நாளுக்கு நாள் ஓங்கும் திருவேற் காட்டுக் குறவஞ்சி நூலைச்—செந்தமிழைச் சொல்லுவேன் என்பதாம்.

## பணையாச்சி

கலையளிக்கும் சிவத்தாயின் கழல்கருதிப் பணிந்தேத்திக்
கருத்து ணர்ந்து
கலைநாதத் தத்துவத்தி கருணையுறும் மெஞ்ஞானக்
ககர சத்தி
நிலைநாதப் பெருந்தலமாம் வேற்காட்டுப் பணையாச்சி
நிமலி சூலி
நிலைஞான வேற்காட்டுக் குறவஞ்சி நறுந்தமிழால்
நவிலு வேனே. 6

**கருத்து:** கலைநாதத்தில் விளங்கும் தத்துவச் செல்வியாய், கருணை பொருந்திய மெஞ்ஞானக் ககரச் சத்தியாய், நிலைத்த நாதப் பெருமை யுடைய தலமாகிய திருவேற்காட்டில் வாழும் பணையாச்சி, நிமலி, சூலி, கலையளிக்கும் சிவத்தாயாய் விளங்கும் தேவியின் பாதங்களைச் சிந்தித்து பணிந்து போற்றி கருத்துணர்ந்து நிலைத்த ஞானம் செழிக்கும் திருவேற்காட்டில் வாழும் குறவஞ்சியைப் பற்றி பால் மணக்கும் பசுந்தமிழால் சொல்லுவேன் என்பதாம்.

## பச்சையம்மன்

விச்சையெலாம் விரைந்தளிக்கும் வித்துவத்தி
வெற்றியளி வீர சத்தி
அச்சமெலாந் தீர்த்தாண்டு அருள்ஞானத்
தமிழளிக்கும் அன்னை தேவி
பச்சையம்மன் எனவந்து குலம்விளங்கக்
கருணைபுரிப் பாரசத்தி
செச்சைகழல் பணிந்தேத்தி வேற்காட்டுக்
குறவஞ்சி செப்பு வேனே. 7

**கருத்து:** எல்லா வித்தைகளையும் சீக்கிரத்தில் அளிக்கும் வித்து வத்தி, எக்காரியங்களிலும் வெற்றியளிக்கும் வீரசத்தி, அச்சம் எல்லாவற்றையும் தீர்த்து என்னை ஆட்கொண்டு அருள்ஞானத் தமிழை அளிக்கும் அன்னையாகிய தேவி, பச்சையம்மன் என்ற திரு நாமந் தாங்கி வந்து எனது குலம் விளங்கக் கருணைபுரியும் பாரசத்தி யின் சிவந்த பாதங்களைப் பணிந்து போற்றி, திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் சொல்லுவேன் என்பதாம்.

## வீரபத்திரன்

சிவநாதத் தத்துவத்தில் திளைத்தாடும்
சிவயோகன் சிவப ரத்தன்
சிவனாரின் நுதல்நீரில் வந்துதித்துப்
பெருந்தக்கன் யாகந் தீர்த்தோன்
தவயோகர் உளத்திலுறும் பத்திரனின்
தாளிணையைச் சென்னி பூண்டு
நவசத்தி வாழ்கின்ற வேற்காட்டுக்
குறவஞ்சி நவிலு வேனே. 8

**கருத்து :** சிவநாதத் தத்துவத்தில் மகிழ்ந்து ஆடல் புரியும் சிவ யோகன், சிவபரம்பொருள் தன்மையையுடையோன், சிவபெருமானின் நெற்றியில் தோன்றிய நீரில் வந்து உதித்து பெரிய தக்கயாகத்தை அழித்தவன் ; தவயோகர்களின் உள்ளத்தில் பொருந்திய வீரபத்திரப் பெருமானின் திருவடிகளைத் தலையில் தரித்து நவசத்தியாகிய கருமாரி வாழ்கின்ற திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் சொல்லுவேன் என்பதாம்.

## பத்திரகாளி

எத்திக்கும் புகழ்ந்தேத்தும் திருநீற்றுப்
பெருமார்க்கம் என்றும் ஓங்க
வித்தையளிச் சிவநாதப் பராசத்தி
பெருத்தக்கன் வேள்வி தீர்த்த
சத்தியளாம் பத்திரையின் இணையடியைச்
சந்ததமும் சிந்தித் தேத்திச்
சித்தர்வாழ் வேற்காட்டுக் குறவஞ்சித்
தமிழ்மாலை சூட்டு வாமே. 9

**கருத்து :** எல்லாத் திசைகளிலும் புகழ்ந்து போற்றும் திருநீற்றுப் பெருநெறி எக்காலத்திலும் ஓங்கி வளர்வதற்கு வித்தையளிக்கும் சிவநாதப் பராசத்தி, பெரியதக்கனின் வேள்வியை அழித்த சத்தி யாகிய பத்திரகாளியின் பாதங்களை எப்போதும் நினைந்து போற்றி, சித்தர்கள் வாழும் திருவேற்காட்டு குறவஞ்சித் தமிழ்மாலையைச் சொல்லுவோம்.

### அகத்தியர்

இகபரத்தும் நலமளிக்கும் திருநீற்றுப்
பெருமார்க்கம் வேத மூல
மகத்துவமும் செந்தமிழும் வையத்தில்
நீடுழி வளர்ந்து வாழ
சகம்புகழும் வேதபுரி வேற்கண்ணி
மணக்கோலம் கண்ட சீலன்
அகத்தியனின் அடிபோற்றி வேற்காட்டுக்
குறவஞ்சி அறைய லுற்றும் 10

**கருத்து :** இம்மையிலும் மறுமையிலும் நன்மை அளிக்கும் திருநீற்று மார்க்கமும் வேதங்களின் மூலப்பொருள் தரும் மகத்துவமும், செம்மையான தமிழும் உலகத்தில் பல ஊழிக்காலங்கள் வளர்ச்சி பெற்று வாழ்வதற்கு உலகம் புகழும் வேதபுரி வேற்கண்ணி ஆகியோரின் மணக்கோலத்தைக் கண்டு கருணை பெற்ற தவச்சீலன் அகத்திய முனிவரின் பாதகமலங்களைப் போற்றி, திருவேற்காட்டுக் குறவஞ்சி நூலைச் சொல்லுவோம் என்றவாறு.

### திருஞானசம்பந்தர்

அருள்ஞானக் கலைவிளக்காய் அருந்தமிழும்
ஆரணமும் அரிய நீற்றுப்
பெருமுறையுந் தழைத்தோங்கக் கவுணியரின்
குலத்துதித்த பெரிய தோன்றல்
திருவோங்கும் வேற்காட்டுத் தலம்பாடும்
சம்பந்தர் தாள்நி னைந்து
திருவளரும் வேற்காட்டுக் குறவஞ்சித்
தமிழ்நூலைச் செப்பு வேனே. 11

**கருத்து :** அருள் ஞானத்தை அளிக்கும் கலைவிளக்காயும், அரிய தமிழும் வேதங்களும் அருமையான திருநீற்று மார்க்கமும் தழைத்து வாழ கவுணியர் குலத்தில் வந்துதித்த தோன்றல்; அழகு ஓங்கும் திருவேற்காட்டுத் தலத்தைப் பாடிய திருஞானசம்பந்தரின் திருவடியை நினைந்து, செல்வம் வளரும் திருவேற்காட்டுக் குறவஞ்சித் தமிழ் நூலைச் சொல்லுவேன் என்பதாம்.

## மூர்க்கநாயனுர்—சேக்கிழார்

சூதாடிப் பொளீருட்டி அறம்வளர்த்த
பெருந் தோன்றல் நீற ணிந்து
வேதநெறி முறைநின்று சிவப்பொருளை
மனத்தெண்ணும் வீர மூர்க்கர்
பாதமலர் பணிந்தேத்திச் சேக்கிழாரின்
திருவடியைப் போற்றி வாழ்த்தி
வேதமெலாந் தழைத்தோங்க வேற்காட்டுக்
குறவஞ்சி விளம்பு வாமே. 12

**கருத்து :** சூது புரிந்து பொருளைத் தேடி தர்மம் செய்த பிரபுவாய் விளங்கி, திருநீற்றையணிந்து வேதமார்க்கத்தைக் கடைப்பிடித்து, சிவப்பொருளை மனத்தில் நினைக்கும் வீரம் பொருந்திய மூர்க்க நாயனுரின் திருவடியைப் பணிந்து போற்றி, அவரைப் புகழ்ந்த சேக்கிழார் திருவடியைப் போற்றி, வாழ்த்தி வேதமெல்லாம் தழைத்தோங்குவதற்குத் திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் செப்புவாம் என்பதாம்.

## அருணகிரிநாதர்

திருஞானம் அளித்தருளும் செவ்வேளைச்
செவ்வேலைக் கரத்தில் ஏந்தும்
ஒருஞான பண்டிதனை மயிலமரும்
உத்தமனை உளத்தில் எண்ணிப்
பெருஞானத் தமிழ்பாடும் அருணகிரிப்
பெருமானின் பாதம் போற்றி
திருஞான வேற்காட்டுக் குறவஞ்சி
செந்தமிழால் செப்ப லுற்றும். 13

**கருத்து :** உயர்ந்த ஞானம் அளித்து அருள்புரியும் முருகனை, சிறந்த வேலைக் கரத்தில் ஏந்தும் ஒப்பற்ற ஞான பண்டிதனை மயிலில், அமரும் உத்தமனை மனத்தில் எண்ணி பெருமை பொருந்திய ஞானத் தமிழ் பாடும் அருணகிரிப் பெருமானின் பாதங்களைப் போற்றி உயர்ந்த ஞானத்தலமாகிய திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் செம்மையான தமிழால் சொல்லுவாம் என்பதாம்.

## பாம்பன் சுவாமிகள்

செங்கடம்ப மலரணியும் சிவமகவைச்
சிவனுக்கும் ஆசா ளுகி
மங்களமாம் பிரணவத்தை யுணர்த்தியருள்
மயிலோனே மனத்தி லெண்ணித்
துங்கமுறும் அருணகிரி பதம் போற்றும்
குமரகுரு தாசச் செம்மல்
செங்கழலைப் பணிந்தேத்தி வேற்காட்டுக்
குறவஞ்சி செப்ப லுற்ரும். 14

**கருத்து :** சிவப்பு நிறம் பொருந்திய கடம்ப மலரையணியும் சிவக் குழந்தையை, சிவபெருமானுக்கும் குருவாகி மங்கள வடிவமாகிய பிரணவத்தை யுணர்த்தி யருள்புரியும் மயிலவனை மனத்தில் நினைந்து உயர்ந்த அருணகிரியின் பாதகமலங்களைப் போற்றும் 'குமரகுருதாசர்' என்ற பெயருடைய ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் செம்மையான பாதத்தைப் பணிந்து போற்றி திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் சொல்லுவாம்.

## அந்தரக் கன்னி

மந்திரமும் மாண்பொருளும் மறைகளெலாம்
உணர்த்துவிக்கும் மாயக் கன்னி
தந்திரமும் உபநிடமும் தாளுகி
நின்றசிவ சமயக் கன்னி
அந்தரத்தி அடிபணிந்து அருந்தமிழின்
நிலையுணர்ந்து அவனி போற்றும்
செந்தமிழின் சிறப்போங்க வேற்காட்டுக்
குறவஞ்சி சொல்லு வாமால் 15

**கருத்து :** மந்திரங்களையும் அவற்றின் மாட்சிமைப்பட்ட பொருள்களையும், எல்லா வேதங்களையும் உணர்த்துவிக்கும் மாயக்கன்னி—தந்திரமும் உபநிஷதங்களும் தாளுகி நின்ற சிவசமயக்கன்னி—அந்தரக் கன்னியின் அடிமலர் போற்றி, அரிய தமிழின் நிலையையுணர்ந்து உலகம் போற்றும் செந்தமிழின் சிறப்பு பெருக, திருவேற்காட்டுக் குறவஞ்சியைச் சொல்லுவாம்.

## அந்தணச் செல்வி

மறைஞானக் கலைக்கன்னி மாதவனின்
சோதரியாம் வீரக் கன்னி
இறைவியளாய் இகபரத்தும் நலமளிக்கும்
அந்தணத்தி எழிற்றாள் ஏத்தி
குறைநீக்கும் குறவஞ்சி வேற்காட்டுக்
குறவஞ்சி குறத்தின் சீர்த்தி
நிறைவுற்ற குறவஞ்சி நாடகமாந்
தமிழ்நூலை நவிலு வேனே 16

**கருத்து :** வேதமும் ஞானமும் விளங்கச் செய்யும் கலைக்கன்னி திருமாலின் சோதரியாகிய வீரக்கன்னி, கன்னியர் கணத்துக்குத் தலைவியாய் இம்மையிலும் மறுமையிலும் நலமளிக்கும் அந்தணக் கன்னியின் அழகிய பாதத்தைப் போற்றி குறைநீக்கும் குறவஞ்சி, வேற்காட்டுக் குறவஞ்சியாய் குறத்தின் கீர்த்தி நிறைவு பொருந்திய குறவஞ்சி நாடகமாகிய தமிழ் நூலைச் சொல்லுவேன்.

## முத்துவீரன்

எத்திக்கும் திருநீற்று நெறிபரவி எந்நாளும்
நிலைத்தோங்கி இன்பம் ஓங்க
முத்தமிழும் வளர்ந்தோங்கும் தண்பாண்டிப் பெருநாட்டில்
சித்தெல்லாம் புரிந்த மேலோன்
முத்துவீரப் பெருந்தகையின் திருப்பாத கமலத்தை
மனமாரப் போற்றி வாழ்த்தி
சித்தியற்றும் வேற்காட்டுக் குறவஞ்சி நாடகமாஞ்
செந்தமிழைச் செப்பு வேனே 17

**கருத்து :** எல்லாத் திசையிலும் திருநீற்று நெறி பரவி எப்போதும் நிலைத்து ஓங்கி மக்கள் இன்பத்தால் செழித்தோங்கவும் இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழும் வளர்ந்து ஓங்கவும், வளம் மிகுந்த பாண்டிய நாட்டில் சித்தெல்லாம் இயற்றிய மேன்மை பொருந்தி முத்துவீரப் பொருந்தகையின் அழகிய பாதகமலங்களை மனமாரப் போற்றி வாழ்த்தி சித்துக்களை புரிவதற்கு ஏற்ற திருவேற்காட்டுக் குறவஞ்சி நாடகமாகிய செந்தமிழ் நூலைச் செப்புவேன் என்பதாம்.

## காத்தவீரன்

வெண்ணீறு நுதல்விளங்க அக்கமணி கழுத்திலங்க
விரல்காட்டி ஞானங் காட்டி
விண்ணவர்கள் களிகூர மண்ணவர்கள் பதம்போற்ற
வெற்பமரும் வீரத் தேவன்
எண்ணமெலாம் ஈடேற்றி அருள்கின்ற எழில்காத்த
வீரன்றுள் இனிதே வாழ்த்தி
தண்டமிழால் வேற்காட்டுக் குறவஞ்சி நாடகமாம்
அருள்நூலைச் சாற்று வேனே. 18

**கருத்து:** நெற்றியில் வெண்ணீறு விளங்கவும், ருத்ராக்ஷமாலை கழுத்தில் பிரகாசிக்கவும் சின்முத்திரையை விளக்கும் விரல் காட்டி ஞானத்தை விளக்கி, தேவர்கள் களிக்கவும் மனிதர்கள் பாதத்தைப் போற்றவும் பர்வத விமானத்தில் அமரும் காத்தவீரன், எண்ணங்கள் எல்லாவற்றையும் ஈடேற்றி அருள்புரியும் அழகிய காத்தவீரன் பாத கமலங்களை இனிமை பொருந்த வாழ்த்தி, குளிர்ந்த தமிழால் திருவேற் காட்டுக் குறவஞ்சி நாடகமாகிய அருள்நூலைச் சொல்லுவேன் என்பதாம்.

## ஸ்ரீ தேவி கருமாரி

வேதத்தின் முழுமூலப் பராசத்தி
வினைதீர்க்கும் திரிசூலி வாலைச் செல்வி
வேதவொலி மிகுந்தோங்கும் வேற்காட்டுத்
தேவிகரு மாரியவள் பாதம் போற்றி
வேதத்தின் மெய்ப்பொருளாம் நீற்றுநெறி
போதநெறி பத்திநெறி தழைத்துவாழ
வேதவன வேற்காட்டுக் குறவஞ்சி
நாடகத்தை இசைபொருந்த விளம்பு வேனே 19

**கருத்து:** வேதங்களின் முழுமூலப் பரம்பொருளாகி விளங்கும் பராசத்தி, வினைகளைத் தீர்க்கும் திரிசூலி, வாலைச்செல்வி வேத ஒலி மிகுந்து ஓங்கும் திருவேற்காட்டுத் தேவி கருமாரியின் பாதம் போற்றி, வேதத்தின் உண்மைப் பொருளாய் திருநீற்றுநெறி, ஞானநெறி, பத்தி நெறி தழைத்து வாழ உத்தர வேதாரண்யமாகிய திருவேற்காட்டுக் குறவஞ்சி நாடகத்தை இசை பொருந்த விளம்புவேன்.

## ஞானாசிரியர்

கலிமிஞ்சுங் கலியுகத்தில் கருணையுரு
வாய்வந்து கலித்துன் பத்தால்
நலிகின்ற உயிர்களுக்கு கருணைநெறி
உணர்த்துகின்ற ராம தாசர்
கலிநீங்கக் குறமுரைக்கும் கருமாரி
அருள்பெற்றோன் கழலைப் போற்றி
கலிநீக்கும் வேற்காட்டுக் குறவஞ்சித்
தமிழ்நூலைக் கழறு வாமே 20

**கருத்து :** கலிக்கொடுமை மலியும் கலியுகத்தில் கருணையுருவாய் வந்து கலியின் துன்பத்தால் நலிந்து வாழும் உயிர்களுக்கு நல்ல கருணை மார்க்கத்தை உணர்த்தும் எனது ஆசான் கலி நீங்கக் குற முரைக்கும் கருமாரித் தேவியின் அருளைப்பெற்ற ஸ்ரீமத் சுவாமி இராம தாஸரின் பாதங்களைப் போற்றி கலிக்கொடுமை நீக்கும் திருவேற் காட்டுக் குறவஞ்சித் தமிழ்நூலைக் கூறுவாம்.

## நூற்பயன்

நல்லதமி ழியலிசையும் நாடகமும்
நவில்கின்ற செஞ்சொல் நூலாம்
எல்லோரும் அறிந்துய்ய இனியதமிழ்ப்
பண்புணர்த்தும் எழிலார் நூலாம்
தொல்லழகு மிக்கோங்கும் வேற்காட்டுக்
குறவஞ்சித் தூய நூலை
நல்லமுறை கேட்டோரும் கற்றோரும்
எண்ணம்போல் நீடு வாழ்வார். 21

**கருத்து :** நல்ல தமிழின் இலக்கணமும் இசையும் நாடகமும் விளக்குகின்ற செம்மைச் சொல் விளக்கும் நூலாம்—எல்லாரும் அறிந்து கடைத்தேறுவதற்கு இனிய தமிழ்ப்பண்பை உணர்த்தும் அழகிய நூலாம்—பழமையான அழகு மிகுந்து ஓங்கும் திருவேற் காட்டுக் குறவஞ்சியாகிய தூய நூலை நல்ல முறை கேட்டோரும் படித்தோரும் தாங்கள் எண்ணும் உயர்ந்த எண்ணத்தைப் போல் நீடுழி வாழ்வார்.

## அவையடக்கம்

இயலிசைநா டகமென்னும் முத்தமிழை
யுணர்ந்தோர்முன் எளியேன் யானும்
இயலிசைநா டகமுணர்ந்த விற்பனனைப்
போலுற்று எழுதி னாலும்
மயல்நீக்கும் திருநீற்றால் வரைந்ததமிழ்
என்றெண்ணி வாழ்த்தி நிற்பர்
கயவனேன் என்றாலும் வேற்காட்டுக்
கருமாரித் தாசன் அன்றோ. 22

**கருத்து :** இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழையும் உணர்ந்தவர்கள் முன்னிலையில் எளியேனாகிய யான் இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழை உணர்ந்த புலமையுடையவனைப் போல எழுதினாலும் மதிமயக்கத்தைப் போக்கும் திருநீற்றினால் எழுதிய தமிழ் என்று நினைத்து வாழ்த்தி நிற்பார்கள். கயவனேன் என்றாலும் திருவேற்காட்டில் திருக்கோயில் கொண்ட ஸ்ரீ தேவி கருமாரி அம்மனுக்குத் தாசன் அல்லவா? அவையடக்கம் கூறியவாறு.

## கட்டியக்காரன் வருகை

சீரோங்குந் தொண்டைவள நன்னாட்டு வேற்காட்டில்
திருமன்றற் கோலங் கொண்ட
ஏரோங்கும் வேதபுரிப் பெருமானின் பெரும்பவனி
எச்சரிக்கை இயம்பு தற்கே
நேரோங்கும் நிலைவாயில் காவல்புரிப் பெருவீரன்
நீள்பிரம்பைக் கரத்தி லேந்திப்
பேரோங்கும் நற்கட்டி யக்காரன் அவைநோக்கிப்
பெருமிதமாய் வருகின் றானே. 23

**கருத்து :** மேன்மை மிகுந்த தொண்டை நாட்டு திருவேற்காட்டில் அழகிய கலியாணக் கோலங் கொண்டு, அழகு மிகுந்த வேதபுரிப் பெருமானின் பெரிய பவனி எச்சரிக்கை சொல்லுதற்கு நேரோங்கும் நிலைத்த வாயில் காவல் புரியும் பெருவீரன், நீண்ட பிரம்பைக் கையில் ஏந்தி புகழ் விளங்கும் நல்ல கட்டியக்காரன் என்பவன் சபையை நோக்கிப் பெருமிதமுடன் வருகின்றான் என்றவாறு.

### கட்டியக்காரன் கூறுதல்

இமவரையன் மடமகளை எழிலன்பு
  கொண்டோங்கி மணந்த போது
சமனேங்கித் தென்புலமும் வடபுலமும்
  தழைந்திருக்க முனிவன் மூலம்
சமன்செய்ய வாணையிட்டு வேற்காட்டில்
  மணக்கோலம் தந்த நாதன்
திமிதமுறும் ஒலியொலிக்க விடையமர்ந்து
  பெரும்பவனி சிறக்க வந்தான். 24

**கருத்து :** பர்வதராஜனின் மகளைப் பேரன்பு கொண்டு சிவபெருமான் திருமணம் புரிந்த போது, தென்னாடும் வடநாடும் சமன்பெற்று வாழ, அகத்திய முனிவர் மூலம் சமன் செய்யும்படி கட்டளையிட்டு. திருவேற்காட்டில் திருமணக் கோலம் அளித்த சிவபெருமான், திமிதம் பொருந்திய ஒலியொலிக்க ரிஷபவாகனத்தின்மீது அமர்ந்து பெரிய பவனி சிறக்க வந்தான்.

## பவனி வர்ணனை

### கட்டியக்காரன் சொல்வது

ராகம் : ராகமாலிகை சிம்மேந்திர மத்திமம் — தாளம் ரூபகம்

பல்லவி :

விடைமீதில் பவனி வந்தார்—வேதபுரி நாதர்
விடைமீதில் பவனி வந்தார்

அநுபல்லவி :

நடமாடும் சிவநாதன் நாகமணியும் போதன்
குடமுனி பணிந்தேத்தும் கோதில்லாச் சிவயோகன்
(விடை)

சரணம் : 1

நாத மிசைக்கும் தேவ நாரீ மணிகள் ஆட
நாரணன் பிரமனும் நற்கரம் சிரம் சூட
கீதகந்தர்வரெலாம் கிளரிசையாலொலிக்க
கவிபாடி விஞ்சையர் உள்ளம் குதூகலிக்க (விடை)

சரணம் : 2 ராகம் : மோகனம்

வேத வித்தக ரெல்லாம் வேதங்கள் ஓதிவர
வேதநெறித் தமிழில் விழுத்தொண்டர் வாழ்த்திவர
பாதத்தைப் பக்தியால் பதஞ்சலி பணிந்துவர
பார்போற்றும் புலிக்காலர் பல்லாண்டு பாடிவர (விடை)

சரணம் : 3 ராகம் : இந்தோளம்

பால முருகர்க்கன்று பெருஞ்சத்தி வேலீந்த
வால வேற்கண்ணிதனை வாமபாகத்தி லேந்தி
கோல மாமதி கங்கை கொன்றையும் சிரத்தேந்தி
ஞாலம் விளங்கக் கதிர்மதித்தீ விழியேந்தி (விடை)

சரணம் : 4 ராகம் : கமாஸ்

நல்வினையளிக்கின்ற திருவாய்ப் புன்சிரிப்பேந்தி
நாதமெழும் உடுக்கை சூலம் மான் கரத்தேந்தி
வல்ல முச்சத்திவளர் முப்புரிநூல் மார்பேந்தி
வேங்கைத் தோலிடையேந்தி வன்கழல் பதத்தேந்தி
(விடை)

**கருத்து :** ரிஷபவாகனத்தில் வேதபுரிநாதர் அமர்ந்து பவனி வந்தார். நடம் புரியும் சிவநாதன், நாகத்தைத் தலையிலணியும் ஞான சிவன், அகத்தியர் பணிந்தேத்தும் குற்றமில்லாத மங்கள யோகன் பவனிவந்தார்.

நாதத்தை இசைக்கும் தேவ நங்கையர்கள் ஆடவும் திருமால் பிரமன் இருவரும் கரங்கூப்பிச் சிரத்தின் மீது வைக்க, கீதத்தில் சிறந்த கந்தர்வர்கள் எல்லாம் சிறந்த இசையை யாழில் ஒலிக்கவும் சிறந்த கவிபாடி வித்யாதரர் மனம் குதூகலிக்க பவனிவந்தார்.

வேத வித்தகர்கள் வேதங்களை முறையாக ஓதி வரவும், வேத நெறித் தமிழில் சிறந்த தொண்டர்கள் வாழ்த்தி வரவும் வேதனும் மாலும் காணாத பாதத்தைப் பக்தியால் பதஞ்சலி பணிந்து வரவும் உலகம் போற்றும் வியாக்ர பாத மகரிஷி பல்லாண்டு பாடி வரவும் பவனி வந்தார்.

பாலசுப்ரமண்யர்க்கு ஆதியில் பெருஞ்சத்தி வேலை அளித்த பாலாம்பிகையாகிய வேற்கண்ணியை இடப்பாகத்திலுடையவராய், அழகிய மூன்றும் பிறைச் சந்திரன், கங்கை, கொன்றை ஆகிய வற்றைத் தலையில் அணிந்து உலகம் என்றும் நிலைபெற்று விளங்கு

வதற்கு, சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய முக்கண்களைப் பெற்றவர் பவனி வந்தார்.

நல்வினையை அளிக்கின்ற அழகிய வாயில் புன்சிரிப்பு பெற்றவராய், இயற்கையான நாதம் எழுந்து ஒலிக்கும் உடுக்கை, திரிசூலம் மான் இவைகளைக் கரத்தில் தரித்து, மிகுந்த சக்திபெற்ற மூன்று சத்திகள் வளரும் முப்புரிநூலை மார்பேந்தி, வேங்கைத் தோலை இடுப்பில் தரித்து வீரக்கழல் பாதத்தில் தரித்து பவனி வந்தார்.

பவனி வந்த முறைமையைச் சிறப்புப் பெற வர்ணித்தவாறு என்க,

## உலாக்காணப் பெண்கள் வருகை

விருத்தம்

விடையேறிப் பவனிவரும் வேதபுரிப்
பெருமானின் காட்சி காண
இடைசிறுத்த மாதரெல்லாம் எழில்நுதலில்
நறுந்திலகம் நன்க ணிந்து
நடைசிறந்த அன்னமென நளினமுறும்
நடைநடந்து நாடிக் கண்டு
படையேந்தும் வித்தகனின் பொன்மேனி
அழகெண்ணி விந்தை யுற்றார்

**கருத்து :** ரிஷப வாகனத்தின் மீது அமர்ந்து பவனிவரும் வேதபுரி நாதனின் காட்சியைக் காண, சிற்றிடையையுடைய பெண்கள் எல்லாம் அழகிய நெற்றியில் நல்ல திலகத்தை நன்கு அணிந்து, நடையிற் சிறந்த அன்னம் போல ஒய்யாரமிக்க நடை நடந்து நாடிக் கண்டு திரிசூலப் படையைக் கரத்தில் ஏந்தும் சிவபெருமானின் பொன்போன்ற திருமேனியின் அழகை நினைந்து ஆச்சரியப் பட்டார்கள்.

## பவனி கண்ட பெண்கள் கூறுதல்

கண்ணிகள் (பாட்டு)—ராகமாலிகை

ராகம் : பேகட	தாளம் : ரூபகம்

1. பெண் ஒருத்தி :

மதன் நாணும் உருக்கொண்டு மங்கையர்க்குத்
தாருகத்தில்
மயல்தந்த மதிசூடி இவர்தானோ என்றுரைப்பார்

மற்றவள் :

மதிசூடி யாமாகில் மாநடனம் புரிந்தருளி
மகிழ்வித்து மனம்போல வாழ்வளிப்பான்
என்றுரைப்பார்

பெண் ஒருத்தி : ராகம் : தன்யாசி

மாமதுரை வணிக மங்கையாராம் பத்தினியர்
மெய்தீண்டி வளையிட்ட மோகனனே
என்றுரைப்பார்

மற்றவள் :

மோகனனே யாமாகில் விழிநோக்கால் எமைக்கவர்ந்து
மெய்யுருக்கி மெய்யடியராக்குவான் என்றுரைப்பார்.

3 ஒருத்தி : ராகம் : வசந்தா

பனிமலையன் பெருந்தவத்தால் பாருதித்த
பைங்கொடியைப்
பரவசத்தால் மன்றல்புரி பரம்பொருளோ
என்றுரைப்பார்

மற்றவள் :

பரம் பொருளே யாமாகில் பாமரராய்ப் பிறந்த எமைப்
பரிந்தேற்று அருள்வாரோ ஆள்வாரோ என்றுரைப்பார்

4 ஒருத்தி : ராகம் : ஸஹானா

அழகுருவோன் அலர்க்கணைக்கும் அசைவுபெரு
உணர்வோங்கி
அருமோனத் தவம்புரியும் அருள்முனியோ
என்றுரைப்பார்

மற்றவள் :

அருள் முனியே யாமாகில் அழகரசி அம்பிகைக்கு
அணிபாதியங்கத்தை அளித்த அருள் வித்தை
யென்பார்

5 ஒருத்தி : ராகம் : லதாங்கி

தொல்லை வினை தீர்க்க தில்லைவனத் தானந்தத்
தாண்டவம்புரி தேவன் இவனே என்றுரைப்பார்

மற்றவள் :

தாண்டவரே யாமாகில் தாள்மாறி நடம்புரிந்து
பாண்டியர்க்காய் உளம் நெகிழ்ந்த பெம்மானே
என்றுரைப்பார்

6 ஒருத்தி : ராகம் : ஆனந்த பைரவி

அருள் நடத்தால் சிவகாம சுந்தரியின் உளம் மயங்க
ஆடல்புரி அழகரசப் பெருமானே என்றுரைப்பார்

மற்றவள் :

அழகரச ரிவராகில் அச்சுதனே மோகினியாய்
ஐயப்பன் தனைப்பெற்ற தொவ்வுமே என்றுரைப்பார்

7 ஒருத்தி : ராகம் : சாதாரிப்பண் (பந்துவராளி)

பத்தன்யாழ் பத்திரர்க்காய்ப் புல்லேமன் செருக்கடக்க
வித்தகனாய் விறகுவிற்ற அற்புதனே என்றுரைப்பார்

மற்றவள் :

அற்புதனே யாமாகில் அன்றிசைத்த சாதாரி
நற்பண்ணை யாழிசையாய் நமக்களிப்பான்
என்றுரைப்பார்

8 ஒருத்தி : ராகம் : தேவமனோஹரி

அங்கண்ணி எண்திசையும் ஐயங்கொண்டு
பொருதவர
மங்களமாய்க் கண்ணுற்று மயல்தந்தான்
என்றுரைப்பார்

மற்றவள் :

மயல் தந்தானுமாகில் வேதபுரி நாதனிவன்
மணக்கோலங் காட்டி எமை மயக்கானே
என்றுரைப்பார்

1—4 : மன்மதனும் வெட்கப்படும் அழகிய உருவத்தைக் கொண்டு தாருகவனத்தில் பெண்களுக்கு மயலையுண்டாக்கிய சந்திரனைத் தரித்த சிவபெருமான் இவன்தானே என்று சொன்னாள்.

அதற்கு மற்றொருத்தி : சந்திரனைத் தலையில் தரித்த சிவபெருமான் இவரேயானால் சிறந்த நடனம் புரிந்து மனம் போலக் களிக்கச் செய்து வாழ்வளிப்பார் என்றாள்.

அழகிய மதுரை மாநகரத்தில் வணிகர்குலப் பத்தினிப் பெண்களின் உடலைத் தீண்டி வளையல் அணிவித்த மோகனசுந்தரனே என்றாள் ஒருத்தி.

அதைக் கேட்ட இன்னொருத்தி: மோகனசுந்தரனேயாகில் திருக்கண்ணேக்கால் எம்மைக் கவர்ந்து மெய்யுருக்கி உண்மை அடியாராக்குவர் என்றாள்.

ஒருத்தி: பர்வதராஜனின் பெருமை பொருந்திய தவத்தால் பூமியில் உதித்த பசுங்கொடி போன்ற பாவையை பரவசத்துடன் திருமணம் புரியும் பரம்பொருளே என்றாள்.

மற்றொருத்தி: பரம்பொருளே என்பது உண்மையானால் பாமரராய்ப் பிறந்த எங்களை பரிந்து ஏற்றுக்கொண்டு அருள்வாரோ அல்லது ஆட்கொள்வாரோ என்றாள்.

ஒருத்தி: அழகே உருவான மன்மதனின் புஷ்ப பாணத்துக்கும் அசையாத உணர்வு பிரகாசித்து அரிய மோகனத் தவம் புரியும் அருள் சீலராக விளங்கும் முனிவனே என்றாள்.

அருள் உள்ளம் பொருந்திய முனிவரே என்றால் அழகரசியான அம்பிகைக்கு அழகிய பாதி தேகத்தை அளித்த அருள் விந்தை என்றாள்.

5 ஒருத்தி: பழைய வினைகளைத் தீர்க்க தில்லைக் காட்டில் ஆனந்தத் தாண்டவம் புரியும் தேவன் இவனே என்றாள்.

மற்றொருத்தி: தாண்டவம் புரியும் தேவன் இவனேயானால் பாண்டியர்க்காய் கால்மாறி நடனம் புரிந்து உளம் உருகிய பெம்மானே இவன் என்பார்.

6 ஒருத்தி: அருள் நடனத்தால் சிவகாம சுந்தரியின் உள்ளம் மயக்கும்படி ஆடல்புரியும் அழகரசப் பெருமானே என்றாள்.

மற்றொருத்தி: அழகரசர் இவரானால் அச்சுதனே மோகினியாய் ஐயப்பனைப் பெற்றது பொருந்தும் என்றாள்.

7 ஒருத்தி: பக்தனாகிய யாழ்பத்திர பாணனுக்கு துணைபுரிய அற்பத்தனம் பொருந்திய ஏமநாதன் செருக்கடக்குவதற்கு வித்தகத் தன்மை பெற்று விறகுவிற்ற அற்புதத்தைப் புரிந்தவனே என்றாள்.

மற்றவள்: அற்புதனேயானால் அன்று பாடிய சாதாரி என்ற சிறந்த ராகத்தை யாழிசையாய்ப் பாடி நமக்குத் தருவான் என்றாள்.

8 ஒருத்தி: அங்கயற்கண்ணி (மீனாட்சி) எட்டுத் திசையிலும் வெற்றி கொண்டு போரிட்டு வரும்போது மங்களமாகக் கண்டு மயல் தந்தவனே என்றாள்.

மற்றவள் : மயல் தந்தவன் இவனுனல் வேதபுரிநாதன் என்ற திருநாமந்தாங்கும் இவன் திருமணக் கோலங் காட்டி எங்களை மயக்க மாட்டானே என்றுள்.

## மதனவல்லி வருதல்

விருத்தம்—கவி வாக்கியம்

வண்டுமுரல் கருங்குழலும் மதிமுகமும் செவ்வாயும்
வெண்ணகையும் வாய்ந்த செல்வி
மண்டுபுகழ் வேற்காட்டுத் திருத்தலம்வாழ் வடிவழகி
மயில்நாணும் சாயல் மங்கை
கண்ணுதலிக் கருமாரி கழலேத்தும் கலைச்செல்வி
கன்னியரும் மயல்கொள் பாவை
விண்ணோரும் அதிசயிக்க மாமதன வல்லியவள்
முறுவலுடன் வெளிவந் தாளே.

**கருத்து :** வண்டுகள் ரீங்காரம் செய்யும் கருநிறக் கூந்தலும் சந்திரனைப் போன்ற முகமும் சிவந்த வாயும் வெண்மைப் பற்களும் உள்ள செல்வியாயும் நாளுக்கு நாள் புகழ் வளரும் திருவேற்காட்டுத் திருத்தலத்தில் வாழும் வடிவழகியாய், மயிலும் வெட்கப்படும் சாயலையுடைய பெண்ணும், நெற்றிக் கண்ணுடைய கருமாரித் தாயின் பாதங்களைப் போற்றும் கலைச் செல்வியாய், பெண்களும் கண்டு மயங்குந் தன்மையுடைய பாவையாய் விளங்குபவள் தேவர்களும் அதிசயிக்கும் வண்ணத்தில் அழகிய மதனவல்லி என்பவள் புன்னகையுடன் வெளியே வந்தாள்.

(வி.ரை) வண்டுமுரல் கருங்குழல் என்பதால் வண்டுகள் மொய்க்காத முன் மலர் கொய்து கூந்தலில் சூடியபடி என்க.'
மதிமுகம்—உவமைத் தொகை.
மண்டுபுகழ்—நெருங்கிய புகழ், வளரும்புகழ் என்றபடி.

## மதனவல்லி வருதல் பாட்டு

ராகம்: பந்துவராளி — தாளம்: ஆதி

பல்லவி :

மதனவல்லி வந்தாள்—ஒய்யாரமாக
மதனவல்லி வந்தாள்

அநுபல்லவி :

மதிமுகம் முறுவல் மாட்சி திகழ
மங்கையர் கண்டு வியந்து மகிழ (மதன)

சரணம் :

பண்ணமைச் சிலம்பு பாதத் தொலிக்க
பண்முறை பாடி இதயங் களிக்க
கண்கவர் அரம்பை ஊர்வசி நாண
கலாப மயிலெனப் பலருங் காண (மதன)

**கருத்து:** மதனவல்லி ஒய்யாரமுடன் வரும்போது, சந்திரனைப் போன்று ஒளிவீசும் அவள் முகத்தில் புன்னகையின் மாட்சி விளங்கவும் பெண்கள் கண்டு ஆச்சரியத்துடன் மகிழ்கிருர்கள்.

இயல்பாகவே பண் அமைந்த சிலம்பு பாதத்தில் சப்திக்கவும் அதற்கேற்றபடி நாவினுல் பண்களை முறையாகப்பாடி மனங்களிக்கவும் தவச்சிரேட்டர்களையும் கண் பார்வையால் கவரும் அரம்பை, ஊர்வசி முதலானவர்களும் கண்டு வெட்கப்படும்படி, தோகை விரித்த மயிலைப் போன்று எல்லோரும் காணும் வகையில் ஒய்யாரமாக நடந்து மதனவல்லி வந்தாள் என்றபடியாம்.

## மதனவல்லி சோலையில் மலர் பறித்தல்

ராகம் : ஸ்ரீ ரஞ்சனி தாளம் : ஆதி

பல்லவி :

பூங்காவில் மலர் பறித்தாள்—மதனவல்லி
பூங்காவில் மலர் பறித்தாள்

அநுபல்லவி :

பூங்குயி லிசைபாட ரீங்காரம் வண்டிசைக்க
பூங்கொடி குழல்கண்டு நீலமயில் நடிக்க (பூங்கா)

சரணம் :

நன்மணம் வீசிடும் மல்லிகை முல்லையும்
நயவிதழ்ச் சம்பங்கி செவ்வந்தி தவனமும்
துன்னிய மரங்களில் சண்பக மலர்களும்
தூரத்தே கண்டவுடன் துரிதமாய்ப் பாய்ந்தோடி
(பூங்கா)

துள்ளி விளையாடும் புள்ளிமானைக் கண்டு
உள்ளம் களித்தாடி ஊக்கமாய்ப் பிடித்தாடி
விள்ளும் சேடியர்கள் மான்விழியை மிஞ்சும்
வல்லியே உன்விழி நல்விழி என்ருேத (பூங்கா)

**கருத்து:** மதனவல்லி பூஞ்சோலையில் மலர் கொய்தாள். அழகிய குயில் இசை பாடவும் வண்டுகள் அதற்கேற்ற ரீங்காரம் பாடவும் மதனவல்லியின் கூந்தலைக் கண்டு நீலத்தோகையுடைய மயில் நடிக்கும் சோலையில் மலர் பறித்தாள். நல்ல மணம் கமழும் மல்லிகை, முல்லை, சம்பங்கி, செவ்வந்தி, தவனம், சண்பகப் பூக்கள், இவைகளை த் தூரத்தில் கண்டவுடனேயே விரைந்து பாய்ந்து ஓடி மலர் பறித்தாள். துள்ளி விளையாடும் புள்ளிமானைக் கண்டவுடன் உள்ளம் களித்து ஆடிப்பாடி, ஊக்கத்துடன் மானைப் பிடித்து ஆடினாள். உடனிருந்த தோழியர்கள் (நீ பிடித்து ஆடும்) மானின் விழியையும் மிஞ்சும் உன் விழியே கண்கள் என்றுரைக்கவும் சோலையில் மலர் பறித்தாள் என்றவாறு.

## மதனவல்லி கும்மியடித்தல்

ராகம் : உசேனி தாளம் : திஸ்ர நடை ஆதி

பல்லவி :

கும்மி யடித்தனளே—மதனவல்லி
கும்மி யடித்தனளே

அநுபல்லவி :

செம்மை சிறக்கும் சேடியர் சூடி
அம்மையின் அருளைப் பாடியாடி (கும்மி)

சரணம் : 1

வானோர் மயங்கும் வடமறைச் சோலையில்
வெண்டாமரை செந்தாமரை மலரும்
ஞான நீற்றுப் பொய்கை அருகில்
நங்கையர் சூழ நல்வளை குலுங்க (கும்மி)

**கருத்து:** மதனவல்லி கும்மியடித்தாள். சேடியர்கள் தன்னைச் சூழ்ந்து வரவும் தேவியின் அருந்திறத்தைப் பாடி அடித்தாள். தேவர்களும் மயங்கும் உத்தரவேதாரண்யம் — திருவேற்காட்டுச் சோலையில்—வெண்டாமரை, செந்தாமரை மலர்கள் மலர்வதும் ஞான மளிப்பதுமாகிய திருச்சாம்பர்ப் பொய்கை அருகில் பெண்கள் தன்னைச் சூழ்ந்துவர, தனது கைவளையல்கள் குலுங்கக் கும்மியடித்தாள் என்றவாறு.

சரணம் : 2

குளிர்நீர்க் குளத்தின் நடுவில் அன்னம்
களித்து நளினத் திடையிடை யாடி
அளிசெம்மலர் வெண்மலர் மகளிருவரை
வலம்சூழ் காட்சி ஈதெனப் பாடிக் (கும்மி)

**கருத்து:** குளிர்ந்த நீர்க் குளத்தின் மத்தியில் அன்னப் பறவை மகிழ்ந்து அன்னப் பறவைகளின் மத்தியில் ஆடி, செந்தாமரை, வெண்டாமரை (லக்ஷ்மி, சரஸ்வதி) மகளிருவரையும் வலம் வரும் காட்சி இது என்று பாடி கும்மியடித்தாள் மதனவல்லி என்க.

## மதனவல்லி சோலையில் விளையாடுதல்

ராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

பல்லவி :

சோலையில் விளையாடினுள்—மதனவல்லி
சோலையில் விளையாடினுள்

அநுபல்லவி :

மாலைத் தென்றலின்மேல் மலர்மணம் அமர்ந்துவர
கோலத் தேனிளவேனில் காலமென்று களிகூர
(சோலை)

சரணம் : 1

பரமேசனின் விழியைப் பார்வதி மறைத்த லீலை
பரவசமாய்ப் பாடியே பரிவுடன் ஆடியாடி
கரவளையினின் ஞேசை காதினில் விழாதபடி
கரந்தொளித்துக் கண்பொத்திக் கன்னியருடன் கூடி
(சோலை)

சரணம் : 2

கருவிழிப் பெருஞ்செல்வி கண்களின் கவினைக் கண்டு
கருணை நிறைந்தொழுகும் கன்னியவள் விழி என்ன
கருமாரி பராசக்தி அருள் விழிகளோ என்ன
கருதித் தோழியர் எல்லாம் கனிமொழியுரைத்திட
(சோலை)

**கருத்து:** மதனவல்லி சோலையில் விளையாடினுள். மாலை நேரத் தென்றற் காற்றில் மலர் மணம் அமர்ந்து வரவும் அழகிய புதிய இள வேனில் (வசந்த) காலம் என்று மகிழ்ச்சியடைந்து விளையாடினுள். பரமசிவனின் கண்களைப் பார்வதி மறைத்த விஞேதங்களைப் பரவசமாகப் பாடியும், பரிவுடன் ஆடியும் கைவளையல்களின் ஓசை காதில் விழாதபடி மறைந்து ஒளிந்து கண்பொத்திக் கன்னியர்களுடன் கூடி விளையாடினுள். கருவிழியுடைய செல்வி கண்களின் அழகைக் கண்டு கருணை நிறைந்து ஒழுகும் கன்னியிவளின் விழிகளைப்

பார்க்கும் போது, கருமாரித் தேவியின் அருள் விழிகளைப் போன் றுள்ளது என்று எண்ணித் தோழியர்கள் எல்லாம் இனிய மொழி யுரைத்துச் சோலையில் விளையாடினுள்.

## மதனவல்லி ஊஞ்சல் ஆடுதல்

பல்லவி :

சித்திர ஊஞ்சல் ஆடினுள்—மதனவல்லி
(வி)சித்திர ஊஞ்சல் ஆடினுள் (சித்திர)

அநுபல்லவி :

சித்திரப் பதுமைகள் நாற்புறமும் நின்ருட
கொத்துச் சங்கிலி ஏந்திக் கோதையர் குதித்தாட
(சித்திர)

சரணம் : 1

மார்பின் மணி முத்தாரம் சுழன்று சுழன்ருட
மாணிக்கக் கைவளைகள் கழன்று கழன்ருட
ஆர்ப்பரவம் முழக்கும் சதங்கைச் சிலம்பாட
கார்வேணிக் குழலாடக் கழல்கள் இணைந்தாட
(சித்திர)

சரணம் : 2

சித்திரைப் பருவநாள் திங்கள் விண்ணொளி வீச
சித்தசன் உளம்மகிழ் சீர்வேனில் வளி வீச
தத்துநீர் அலைவீசும் தண்பாலிக் கரையினில்
சத்தி கருமாரி வாழ் வடமறைச் சோலையில் (சித்திர)

**கருத்து :** மதனவல்லி ஊஞ்சல் ஆடியதைக் குறிப்பது. சித்திரப் பதுமைகள் நான்கு பக்கங்களிலும் நின்று ஆடவும், கொத்துச் சங்கிலி யைக் கோதையர்கள் பிடித்துக் குதித்து ஆட ஊஞ்சல் ஆடினுள். மார்பிலிருந்த மாணிக்க முத்தாரங்கள் சுழன்று சுழன்று ஆடவும் கையிலிருந்த மாணிக்க வளையல்கள் கழன்று கழன்ருேடவும் கருத்த கூந்தலாடக் கழல்கள் இணைந்தாடவும், ஊஞ்சலில் அமர்ந்து ஆடினுள். சித்திரைப் பௌர்ணமி தினத்தில் சந்திரன் ஒளிதரும் போது, மன்மதன் மனம் மகிழும்படி சிறந்த வசந்த காலத் தென்றல் காற்று வீசவும், தத்தித்தெளிக்கும் நீர் அலை வீசும் குளிர்ந்த பாலி நதிக்கரையினில், கருமாரிச் சத்தி வாழும் வடமறைக்காட்டு (திரு வேற்காட்டு) சோலையில் ஊஞ்சல் ஆடினுள்.

சித்தசன் - மன்மதன். சித்தத்தில் பிறப்பவன் (வடநூல் மரபு).

## மதனவல்லி பவனி காணல்

விருத்தம்—கவி வாக்கியம்

வடமறைக் காட்டுச் சோலை வந்தமா மதன வல்லி
படரொளிப் பசும்பொன் மேனி பரமனின் பவனி கண்டாள்
உடற்பொருள் ஆவி எல்லாம் உத்தமன் தனக்கே யாக்கத்
திடமுள முன்த வத்தால் சித்தமும் உருகி நின்ருள்

**கருத்து:** வடமறைக்காடு உத்தரவேதாரண்யம். திருவேற் காட்டுச் சோலையில் வந்த மதனவல்லி, ஒளி படரும் சிவந்த பசும் பொன்மேனி பெற்ற பரமசிவனின் பவனியைக் கண்களால் கண்டாள். உடல், பொருள், ஆவி ஆகியவற்றை அந்த உத்தமனுக்கு அர்ப் பணிக்க முன்பிறவியில் செய்த திடமான தவவலிமையால் சித்தம் உருகி நின்ருள் என்றவாறு.

## மதனவல்லி சொல்வது

ராகம் : சுத்தசாவேரி தாளம் : ஆதி

பல்லவி :

யாரோ இவர் யாரோ
எழிலெல்லாந் திரண்டோங்கி எதிரே வருகின்றவர்

அநுபல்லவி :

மகிதலத்தோர் கண்டு மயங்கும் வேடங்கொண்டு
மெய்யொளி தழைக்கின்ற மாமலர் முகம் கொண்டார்
(யாரோ)

சரணம் : 1

நிலவொளிச் சடைகண்டால் நலியுமே மாலையத்தம்
நற்பதத்தின் நடைகண்டால் நாணுமே நெடுமாமத்தம்
மலர்க்கணை மாரன்கண்டால் மருள்வானே நித்தநித்தம்
முகிழருள் விழிகண்டு மலருவதேன் என் சித்தம்
(யாரோ)

சரணம் : 2

அழகிற் சிறந்த இவர் அரவத்தைப் பூண்டதென்னே
ஆடகமேனி தன்னில் அணிகண்டம் கறுத்ததென்னே
கழலணிக் காலையிவர் காலைமேல் வருவதென்னே
கலைமதி கொண்ட நம்பி குறைமதி பூண்ட தென்னே
(யாரோ)

கருத்து : மதனவல்லி சொல்வது : இவர் யார் என்று வியந்து நிற்றல். அழகு எல்லாம் திரண்டு ஒன்ருகி எதிரே வருகின்றவர் இவர் யாரோ என்றல்.

உலகத்தவர் கண்டு மயங்கும் வேடங் கொண்டு உண்மை ஒளி தழைக்கும் சிறந்த மலர் போன்ற முகங்கொண்டவர் யாரோ ?

மூன்ரும் பிறைச் சந்திரனைத் தரித்த சடையைக் கண்டால் மாலை யத்தமும் நலியும். நல்ல பாதத்தின் நடை கண்டால் யானையும் வெட்கப்படும். புஷ்பபாணங்களையுடைய மன்மதன் கண்டால் தினந் தோறும் மயங்குவான். தானுகவே முகிழ்க்கும் அருள்விழியைக் கண்டு சித்தம் மலருவது ஏனோ ? அழகில் சிறந்து விளங்கும் இவர் பாம்பை ஆபரணமாகப் பூண்டது என்னே ! பொன் போன்ற அழகிய மேனிதன்னில் அழகிய கழுத்து கறுத்தது என்னவோ ? வீரக் கழலணியும் காளையாக விளங்கும் இவர் காளை மாட்டின் மேல் வருவது என்னவோ ? கலையும் மதியும் இயற்கையாகப் பெற்று விளங்கும் இவர் குறைமதியாகிய பிறைச் சந்திரனைப் பூண்டது என்னமோ என்று தானே பாடி மயங்கியவாறு—என்பதாம்.

## தோழியர் வேதபுரீசன் என அறிவுறுத்தலும் மதனவல்லி மயல் கொள்ளுதலும்

விருத்தம்

வேதமெய்ப் பொருளோன் கண்டாய் வேற்காட்டி
லுறைவோன் கண்டாய்
போதத்தால் சித்தி யற்றும் புனிதரும் இவரே கண்டாய்
நாதனெவ் வுயிர்க்கு மென்று நங்கையர் நவிலக் கேட்டு
கோதையாம் மதனக் கன்னி குழைந்துள மயல்கொண்
டாளே

கருத்து : வேதத்தின் மெய்ப்பொருளாக விளங்குபவன்; திருவேற்காட்டில் வாழ்பவன்; ஞானத்தால் சித்து புரியும் புனிதனும் இவனே என்று தோழியர்கள் கூற எல்லாவுயிர்க்கும் இவனே நாதன் என்பதையும் கேட்டு மதனவல்லி உளங் குழைந்து மயல் கொண்டாள்.

## மதனவல்லி சொல்வது

ராகம் : நாதநாமக்ரியை தாளம் : ஆதி

பல்லவி

நெஞ்சம் உருகுதம்மா—தோழியே
நெஞ்சம் உருகுதம்மா

அநுபல்லவி :

கஞ்சமலர் வதனமும் கனிந்தருள் முறுவலும்
செஞ்சுடர் மேனியும் சிந்தையை மயக்கிட (நெஞ்சம்)

சரணம் : 1

கண் கொள்ளாப் பேரழகுக் கதிர்மேனிப் பெருஞ்சீலன்
கண்ணேறு படுமென்று கருநாகம் பூண்டானே
எண்ணத்தில் எப்போதும் இமவரைப் பெருமார்பும்
எழிற் கொவ்வைச் செவ்வாயும் இன் முறுவலும்
எண்ணி (நெஞ்சம்)

சரணம் : 2

தடத்தோள் இராவணன் வெற்பசைத்திடும் வேளை
இடத்தமர் நாயகி இதய பயங்களைந்து
திடப்பாத விரலூன்றிச் சாமமிசை வித்தவனைக்
கடைக்கண்ணினால் என்னைக் கவர்ந்தானைக்
கருதுங்கால் (நெஞ்சம்)

**கருத்து :** மதனவல்லி தோழியிடத்துச் சொல்வது : என் நெஞ்சம் உருகுகிறது. (என் செய்வேன்) தாமரை போன்ற முகமும் கனிந்த புன்சிரிப்பும் சிவந்த மேனியும் என் சிந்தையை மயக்கியதால் நெஞ்சம் உருகுது.

கண்ணுக்கு அடங்காப் பேரழகுள்ள ஒளி மிகுந்த தேகமுடைய பெருமை பொருந்திய சீலன், திருஷ்டிபடும் என்று கருமை நிற நாகத்தை ஆபரணமாகத் தரித்தானே? எனது எண்ணத்தில் எந்த நேரத்திலும் இமயமலை போன்று அகன்ற பெருமார்பும் அழகிய கொவ்வைச் செவ்வாயும் இனிய புன்சிரிப்பும் நினைத்து நெஞ்சம் உருகுகின்றது.

விசாலமான தோளுடைய இராவணன் கயிலாய மலையை அசைக்கவும் சிவனின் இடப்பக்கத்தில் அமர்ந்த நாயகி அஞ்சவும் அப்பயத்தைப் போக்கத் தனது திடம் மிகுந்த இடப்பாத விரல் ஊன்றி மலையை அழுத்தவும், இராவணனை சாமகானம் பாடவைத்தவனை, கடைக்கண்ணினால் என் உள்ளத்தைக் கவர்ந்தானை நினைக்கும் போது நெஞ்சம் உருகுகின்றது என்று உரைத்தவாறு.

## விரகதாபத்தால் மதனவல்லி மயங்கிவிழப் பாங்கியர் தாங்குதல்

விருத்தம் :

வேனிலான் மலர்க்கணையால் உளம்வாடிப்பெருந்துயர
மாக்கடலில் விழுந்த நங்கை
பானிலாச் சிரஞ்சூடும் பரசிவனை மனக்கண்ணில்
பன்முறையுங் கண்டு கண்டு
மானினிணை விழிசோர மங்கையர்க்கு நேர்கதியும்
இந்நிலையோ என நினைந்து
ஊனுருகி மோகத்தால் கீழ்விழ்ந்தாள் ; பாங்கியர்கள்
பதைத்தோடித் தாங்கி நின்றார்

**கருத்து:** வேனிற் காலத்துக்கு உரிய மன்மதனின் புஷ்ப பாணங்களால் தாளாமல், மனம் வாடிப் பெருந்துயரமாகிய கடலில் விழுந்த நங்கை, பால்போன்ற வெண்ணிலவைத் தலையில் சூடிய பரமசிவனை மனக்கண்ணால் பலமுறை பார்த்துத் தன் விழிகள் சோர்ந்தன. மங்கைப் பருவத்தினர்க்கு நேர்கின்ற கதியும் இந்த நிலையோ என்று நினைந்து ஊன் உருகி மோகத்தினால் கீழே விழுந்தாள். தோழியர்கள் உடனே பதைத்து ஒடித் தாங்கி நின்றார்கள்.

## பாங்கியர் சைத்தியோபசாரம் செய்தல்

ராகம் : பைரவி தாளம் : ஆதி

பல்லவி :

உபசாரம் பலபுரிந்தார்—பாங்கியர்
உபசாரம் பலபுரிந்தார்

அநுபல்லவி :

இபமுகன் முன் செல்ல இயம்பல முழங்க
இடபமேல் ஊர்வோனை எண்ணி வாடும் வல்லிக்கு
(உபசாரம்)

சரணம் : 1

பஞ்சணைமேல் கிடத்திப் பரிவுடன் அணைப்பார்
பாவினம் பலபாடிப் பண்டைக்கதை கூறுவார்
செஞ்சந்த னக்குழம்பால் மேனித்தழல் தணிப்பா
கஞ்சத் தளிரால் மூடிக் குளிர்ப் பன்னீர் தெளிப்பார்
(உபசாரம்)

சரணம் : 2

கனிவர்க்கம் கொடுப்பார் கனிமொழி பேசுவார்
கபிலைப் பசுவின்பாலைக் கற்கண்டுடனளிப்பார்
இன்சுவைப் பொருள் எல்லாம் ஏலாதெனவுரைக்கும்
இவளெழில் மெய்வாடி இளைத்த தந்தோ என்று
(உபசாரம்)

**கருத்து :** மதனவல்லிக்கு தோழியர் சைத்தியோபசாரம் செய்தார். யானை முகன் முன்னே செல்லவும் பற்பல வாத்தியங்கள் முழங்கவும் ரிஷப வாகனத்தின் மேல் வருவோனை நினைந்து வாடும் மதன வல்லிக்கு உபசாரம் செய்தார்.

மெல்லிய பஞ்சணைமேல் கிடத்துவார். பற்பல பாடல்கள் பாடிப் பழைய கதைகளைச் சொல்லுவார்கள். செம்மையான சந்தனக் குழம் பால் மேனியில் ஏற்பட்ட வெம்மையைத் தணிப்பார். தாமரைத் தளிரால் மூடிக் குளிர்ந்த பன்னீரைத் தெளிப்பார். பல கனிவர்க்கங் களைக் கொடுப்பார். இனியமொழி பேசுவார். பசும் பாலும் கற்கண்டும் அளிப்பார். இனிக்கும் பொருள் யாவும் ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்று சொல்லும் இவள் அழகுமிக்க தேகம் இளைத்தது. ஐயோ என்று உபசாரம் புரிந்தனர்.

## மதனவல்லி நிலவினுல் வருந்துதல்

ராகம் : நீலாம்பரி தாளம் : ஆதி

உண்ணிலவும் துயரோங்க உடல்வாடிப்
பல்வேறு எண்ணம் எண்ணி
கண்சோர முகம்வியர்க்கத் தரைவீழ்ந்து
எழுந்தமர்ந்து கருதும் வேளை
வெண்ணிலவும் மென்காற்றும் விரகத்தீ
யைவளர்க்க வாடி வாடி
வெண்ணிலவைக் கண்ணுற்று வாதிட்டாள்
வேண்டி நின்ருள் வல்லியாளே.

**கருத்து :** உள்ளத்தில் விளங்கும் துயர் ஓங்கவும் உடல் வாடியது. பல்வேறு எண்ணங்களை எண்ணி, கண் சோர்ந்தது ; முகம் வியர்த் தது. தரையில் வீழ்ந்தாள். பிறகு எழுந்து அமர்ந்து ஆராயும்போது வெண்ணிலாவும் தென்றற் காற்றும் விரகத்தீயை வளர்ப்பதால் வாடி நின்று நிலையைப் பார்த்து வாதிட்டாள். தணியும்படி வேண்டினுள் மதனவல்லி என்றவாறு.

## மதனவல்லி வெண்ணிலாவிடம் சொல்வது

1 கன்னியின் சிரமமர்ந்த வெண்ணிலாவே—சிறு
கன்னி என்மேல் காயலாமோ வெண்ணிலாவே
பொன்னுடன் கடலுதித்தும் வெண்ணிலாவே
வெம்மைப்
பொல்லாங்கே இழைப்ப தென்ன வெண்ணிலாவே.

2 குறைகலையாய்த் தேய வீசன் வெண்ணிலாவே—சாபக்
குறைநீக்கிச் சிரத்தணிந்தான் வெண்ணிலாவே—அவ்
விறைவனையே நாடுமென்னை வெண்ணிலாவே
நிறைதுயரில் ஆழ்த்துவதேன் வெண்ணிலாவே.

3 நிறைவீயும் நாதன் அருள் வெண்ணிலாவே
நீயறியாக் காரணத்தால் வெண்ணிலாவே
நிறைகுறையாய் மாறும்நீ வெண்ணிலாவே
நிறைவான செருக்குற்ருய் வெண்ணிலாவே.

4 பாருலகின் இருள்நீக்கும் வெண்ணிலாவே—மனப்
பாரஇருள் நீக்கிடுவாய் வெண்ணிலாவே
சேர உளங் கொண்ட சேதி—வெண்ணிலாவே
சேவீரர் செவியுரைப்பாய்—வெண்ணிலாவே.

**கருத்து :** பொருள் வெளிப்படை
(வி-ரை) கன்னியின் சிரம்-கருமாரியின் தலை. பொன்னுடன் உதித்தல்-திருமகளுடன் திருப்பாற்கடலில் நிலா பிறந்ததை சுட்டுதல்.

சேவீரர்—ரிஷபவாகனத்தில் வரும் வீரனாகிய சிவபெருமான்.

## மதனவல்லி மன்மதனால் துன்புற்றுப் புலம்பல்

கார்நீலக் கலாபமயில் சிறைவிரிக்கக்
குயில்பாடத் தருணம் கண்டு
சீர்வேனில் துணைகொண்டு மதிகுடையாய்
இரதியுடன் தென்ற லேறி
நேர்கன்னல் சிலையேந்தி ஐம்மலர்மாக்
கணையோனும் நினைவில் தோன்ற
போர்மாரன் தனைநோக்கிப் புலன்நைந்து
வாதிட்டாள் புலம்பி னளே

கருத்து: கருநீலத் தோகையையுடைய மயில் சிறை விரித்து நிற்க வும் குயில் பாடவும் வசந்தகாலத்தைத் துணையாகக் கொண்டு சந்திர னைக் குடையாகவும் ரதியுடன் தென்றற் காற்ருகிய தேரில் ஏறி சிறந்த கரும்பு வில்லைத்தரித்து, ஐந்து புஷ்ப பாணங்களுக்குத் தலைவ ஞகிய மன்மதனும் நினைவில் தோன்றவும் போரில் வல்ல மன்மதனைப் பார்த்துப் புலன் நைந்து வாதிட்டாள்; புலம்பினுள் மதனவல்லி என்றவாறு.

## மதனவல்லி மன்மதனிடம் சொல்வது

ராகம்: கண்ணிகள்

செஞ்சுருட்டி தாளம்: ஆதி

1. கன்னல் சிலையோடு கவின்மலர்க் கணையேந்தும்
   கருமாரியால் பிழைத்தாய்—மன்மதா
   அன்னை கருமாரி அடிமலர் போற்றும் என்மேல்
   அலர்க்கணை ஏவலாமோ—மன்மதா

2. ஞானவிழி யால்எரிந்த நவையை உளத்தில் கொண்டு—
   நாதனை நினையு மென்மேல்—மன்மதா [அந்
   கானல் கணைதொடுத்தாய் கனவீரன் நீ என்ருல்
   கண்ணுதல் மீதெய்வாய்—மன்மதா

3. தென்மலைத் தென்றலும் வன்புயலெனச் சீறத்
   தந்திரம் செய்தாயே—மன்மதா
   என்றன்மேல் சீறினுல் எழும்கருமாரி நாகம்
   இமைப்பினில் விழுங்காதோ—மன்மதா

4. மன்னுயிர் இன்போங்க வாழ்வளிக்க வந்தநீ
   மாதுன்ப மெனக்கீந்தாய்—மன்மதா
   மன்ருடியைச் சேர வரமளிக்காவிடின்
   மாபழி சேருமுன்னை—மன்மதா

கருத்து: கரும்பு வில்லுடன் அழகிய புஷ்ப பாணத்தைக் கரத்தி லேந்தும் கருமாரியால் பிழைத்தாய். அன்னையால் கருமாரியின் பாத மலரைப் போற்றும் என்மேல் புஷ்பக்கணையைத் தொடுக்கலாமோ!

ஞானக்கண்ணுல் எரிந்த குற்றத்தை மனத்தில் நினைத்து சிவ பெருமானை நினைக்கும் என்மீது கானல்கணையைத் தொடுத்தாய். கன வீரன் நீ என்ருல் சிவபெருமான் மீது தொடுப்பாய்.

பொதியமலைத் தென்றற் காற்றும் வலிமையிருந்த புயல்போன்று சீறுவதற்குத் தந்திரம் செய்தாய். என்மேல் சீறினுல் எழுச்சியுற்ற கருமாரி நாகம் இமைப்பொழுதில் உன்னை விழுங்காதோ? நிலைத்த மனித உயிர்கள் இன்பம் ஓங்க வாழ்வை அளிக்க வந்த நீ பெரிய துன்பத்தை எனக்களித்தாய். மன்றில் ஆடும் சிவநாதனைச்சேர வரம் அளிக்காவிட்டால் உனக்குப்பெரிய பழியாகும் என்ருள்.

## தோழியர் மதனவல்லி விவாதித்தல்

கண்ணிகள்

ராகமாலிகை

ராகம்: திலங்கி தாளம்: ஆதி

1. தோழி:

மனித்தப் பெண்ணுகி மண்ணில் சனித்தும் சிவநாதனை
மனத்தில் வரிக்க லாமோ—வல்லீ!

மதனவல்லி:

அனித்தர் வாழ் மண்ணில்தானே ஆலவாய் அமரும் சொக்கர்
அருள்விளையாடல் செய்தார் தோழீ!

ஹம்ஸாநந்தி.

2. தோழி:

அருளாடல் புரிதேவர் அவனியிலே பிறந்த
அரிவையை மணந்தாரோ வல்லீ!

மதனவல்லி:

திருமாலோன் கோதையையும் முருகன் குறத்தியையும்
திருமணம் புரிந்தாரே தோழீ!

சாயி.

3. தோழி:

மாமனும் மருகனும் மணந்ததை மொழிந்தாயே
மகதேவன் மணந்தாரோ வல்லீ

மதனவல்லி:

தாமே பரதவனுய்ப் படகேறி மீன்கொண்டு
தோகையை மணந்தாரே தோழீ.

பரசு.

4. தோழி :

கல்யாண சுந்தரனைக் கரதலம் பற்றிடக்
கடுந்தவம் செய்தாயோ வல்லீ !

மதனவல்லி :

தொல்வேத புரிநாதன் திருத்தாள் நினைந்தாலே
தவப்பயன் சேராதோ தோழீ.

**கருத்து :** பொருள் வெளிப்படை. தோழிக்கும் மதனவல்லிக்கும் நடந்த விவாதம் எளிய நடையில் அமைந்துள்ளதாதலின் எளிதில் உணரலாம்.

## மதனவல்லி தோழியைத் தூது செல்ல வேண்டுதல்

ராகம் : பிலஹரி தாளம் : த்ரிபுடை

பல்லவி :

சிந்தை தெரிந்து சொல்வாய்—சிவநாதன்பால்
தூது சென்று

அநுபல்லவி :

செந்தமிழ்ப் பண்ணேற்று பைந்தொடிப் பரவைபால்
சுந்தரர்க்கா யாரூரில் தூதுசென்றவரிடம் (சிந்தை)

சரணம் 1

ஊண் உறக்கமின்றி உள்ளம் வருந்துகின்றேன்
உலகினிற் பிறந்தும் உமைபாகனை வரித்தேன்
வேண்டிய வரமளிப்பான் வேற்காட்டு நாதன்என்று
உள்ளத்துறுதி கொண்டேன் விரகத்தால்
வாடுமென்றன் (சிந்தை)

சரணம் 2

மாதொரு பங்குடையார் மாமதனை வென்ருர் – அவ்
வேதனைசெல் மன்மதனை வெருட்டாரோ என்று
ஆதிபராசக்தியவள் ஆணையை விரித்துரைக்க
நீதியில்லா அரக்கனிடம் தூது சென்றவரிடம் (சிந்தை)

**கருத்து :** மதனவல்லி விரகதாபத்தால் மெலிந்து வருந்தி, தன் தோழியைச் சிவபெருமானிடம் தூது செல்ல வேண்டுதல். சிவபெரு

மானிடம் சென்று என் சிந்தையில் நினைந்ததைச் சொல்வாய் என்றல். செந்தமிழ்ப் பண்ணைக் கேட்டு உருகி பரவை நாச்சியாரிடம் சுந்தர மூர்த்திக்காக, திருவாரூரில் தூது சென்றவரிடம் சிந்தை தெரிந்து சொல்வாய் என்றாள். உணவும் உறக்கமும் இல்லாமல் மனம் வருந்துகின்றேன். உலகில் பிறந்து பார்வதி சமேதனாகிய சிவபெருமானையே நினைந்தேன். அன்பர்கள் விரும்பிய வரத்தை அளிக்கும் திருவேற்காட்டு வேதபுரீசன் என்று உள்ளத்தில் உறுதி கொண்டேன். விரகத்தால் வாடுமென்றன் சிந்தையைத் தெரிந்து சொல்வாய்.

பெண்ணை ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான் மன்மதனை வெற்றி கொண்டார். எனக்கு வேதனை தரும் மன்மதனை ஏன் வெருட்டாமல் உள்ளார் என்றும், ஆதி காலத்தில் பராசக்தியின் கட்டளையை எடுத்துச் சொல்ல நீதி என்பது அணுவளவும் இல்லாத அரக்கனிடத்தில் தூது சென்றவரிடம் சிந்தை தெரிந்து சொல்வாய் என்றாள் என்றவாறு.

## குறத்தி வருகை

வானோர் மண்ணோர் வணங்கிப் போற்ற
கோனேரிக் கரையில் நீல வண்ணனைப்
பானிலா வணிந்த பரமனும் புகழ
நான்முகன் நான்மறை நவின்று பணிய
இந்திரன் முதலாய் எண்மரும் பணிசெய
சந்திர சூரியர் சேடன் கருடன்
எந்த நேரமும் இணையடி வழுத்த
முந்தை மறையொலி சந்தத் தமிழொலி
சிந்தை மகிழ்ந்து செவிகொளும் திருமால்
பந்த மறுத்தோர் இதயம் வாழ்வோன்;
இமயம் முதலாய்க் குமரி ஈறாய்ச் 10
சமய வாதிகள் பலரும் போற்றும்
அமலன் ஆதியன் அறவாழி அண்ணல்
கமலை நிதமும் கழல்தொடு முதல்வன்
மண்ணோர் வினையைத் தீர்த்து வரம்தரும்
கண்ணன் கருணையன் கார்முகில் வண்ணன்
எண்ணிய எண்ணம் ஈடேற்றி யருள்வோன்
புண்ணியம் கலியில் பொருந்தச் செய்வோன் 18
திருமலை வாசன் சீநி வாசன்

ஒருபெரும் தங்கை உலகம் வாழ
நீற்றினுல் ஐந்தொழில் நிலையுறப் புரிந்து
போற்றுவோர்க் கருளும் பூரண சத்தி 24
கருணை மாரி பொழியும் மாரி
இருவினை தீர்க்கும் கிருஷ்ண மாரி
திருப்புகழ் தினமும் தரணியில் பரப்பும்
திருமலை வாழும் அருட்பெருங் குறத்தி
மன்னர் முடிமணி போலொளி வீசும்
பன்னிற வண்ணப் புள்ளினச் சிறைகள்
வான்முகில் நாணும் அல்லிருட் குழலில்
துன்னிச் செருகிய தூநறுங் கொண்டையாள் 32
கடைக்கண் நோக்கால் கடுந்தவர் சித்தம்
கணத்தில் கலக்கும் கருவிழிக் கெண்டையாள்
திருநீற் ருெளியுடன் சிந்துரஞ் சிறந்து
அருளொளி விளங்கும் அணிபிறை நுதலாள் ;
பணிமணி நிகர்த்த ஒளிக்கல் பதித்த
பணியணி ஒளிதிகழ் அழகொளிர் நாசியாள் ;
தந்தமும் தளவமும் தோற்கும் வெண்மையாள்
சுந்தரம் துலங்கும் தூவெண் நகையாள் ; 38
அருளுரை மொழியும் அருங்கலை மொழியும்
தெருளுறச் சிறக்கும் சீர்செவ் வாயினுள் ;
வெண்மணி செம்மணி நீலக் கருமணி
திண்மணி பச்சைத் திருமணி வளைமணி
குலமணி பாசிக் குன்றி மணியுடன்
நலமுறக் கோத்த ஆரம் பலப்பல
அணிந்து வனப்புற விளங்கு மார்பினுள் ; 45
பணியணை துயிலும் பரமனுக் குரிய
சங்காழி யிலச்சினை பொறித்த புயத்தினுள்
பொங்கெழில் மணிவடம் பூண்ட நுண் ணிடையாள் ;
மந்திரப் பிரம்பும் வேம்பிலைக் கொத்தும்
தந்திர மியற்றும் மாத்திரைக் கோலும்
எழிலுறும் கரத்தினி லேந்தி மகிழ்வோள்
விழுச்சிலம் பொலிக்கும் மென்மலர்ப் பதத்தாள் ;
அணிபதச் சதங்கை ஆர்ப்புறும் நடையாள்

இணைவிழி நோக்கால் இமையவர் ஏங்க
புருவநன் னெளிவால் புவியோர் மயங்க
முருகு முறுவலால் முனிவரர் கலங்க
மென்குரல் குயிலாள் மயக்கும் ஒயிலாள்
தன்னிக ரின்றித் திருக்குற முறையைப்
பன்னரும் பல்வகைக் குறிகளால் விளக்கி
எண்ணெழு தேயம் எங்கும் சென்று
திண்ணிய வேந்தரால் சீர்புகழ் பெற்று
நண்ணிய மாந்தர் வினவுங் காலை
கைக்குறி மெய்க்குறி விழிக்குறி மொழிக்குறி
மைக்குறி காலம் மூன்றும் உரைகுறி
விரும்பிய துரைக்க வேற்காட்டுத் தேவி
கருமாரி நாமம் கருத்தில் இருத்தி
உண்மைக் குறியுரை வித்தக வஞ்சி
பண்குற வஞ்சிப் பாவை வந்தனளே. 68

1-10 (வானோர்.........வாழ்வோன்)

தேவர்களும் மனிதர்களும் எப்போதும் வணங்கிப் போற்றவும் கோனேரிக் கரையில் நீலநிறம் பொருந்திய திருமேனியுடையவனாய் உள்ளான். வெண்மையான நிலாவைத் தலையில் சூடிய சிவபெருமான் புகழ, பிரமதேவன் நான்கு வேதங்களைச் சொல்லி பணியவும் இந்திரன் அக்கினி, யமன், நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் ஆகிய எட்டுத்திக்குப் பாலகர்களும் பணி செய்யவும் சந்திரன், சூரியன், ஆதிசேஷன், கருடன் ஆகியோர் எந்த நேரத்திலும் திருவடிக் கமலங்களை வாழ்த்தவும் நான்கு வேதங்களின் ஒலியும் சந்தத் தமிழின் ஒலியும் மனம் மகிழ்ந்து செவியில் கேட்டு மகிழும் திருமால்; பற்றுக்களினின்றும் நீங்கிய பக்தர்களின் மனத்தில் வாழ்வோன்.

11-18 (இமயம்......செய்வோன்)

இமயத்திலிருந்து கன்யாகுமரி வரையில் உள்ள எல்லாச் சமய வாதிகளும் போற்றும் அமலனாய், ஆதிமூர்த்தியாய், தர்மத்தை நிலை நிறுத்தும் சக்கரந்தரித்த பெருமையுடையவனாய், திருமகள் தினந் தோறும் பாதத்தைத் தொட்டு வழிபடும் முதல்வனாய் உலகமக்களின் வினையைத் தீர்த்து வரம் கொடுக்கும் கண்ணன்; கருணை நிரம்பிய வன்-கருநீலமேகம் போன்ற நிறமேனியன்-எண்ணிய எண்ணங்களை ஈடேற்றி, அருள்புரிபவன். கலியுகத்தில் புண்ணியத்தைப் பொருந்தும் படிச் செய்வோன்,

19-24 (திருமலை......மாரி)

திருமலையில் வாசம் செய்பவனுய் ஸ்ரீநிவாஸன் என்ற திருநாமந் தாங்கியவனின் ஒப்பற்ற பெருமை பொருந்திய தங்கை, உலகம் வாழ்வதற்கு திருநீற்றினுல் ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந்து தொழில்களையும் நிலைபொருந்தப் புரிந்து தன்னைப் போற்றுகின்ற அன்பர்களுக்கு அருள் செய்யும் பூரண சத்தி கருணையை மழை போலப் பொழிந்து காக்கும் மாரி நலமளிக்கும் கிருஷ்ணமாரி.

25-32 (திருப்புகழ்......கொண்டையாள்)

ஸ்ரீநிவாசன், கருமாரித் தேவி (அண்ணன், தங்கை) ஆகிய இருவரின் புகழைப் பூலோகத்தில் பரப்பும் மாது-திருமலையில் வாழும் அருட்பெருங் குறத்தி-அரசர்களின் முடி மணிபோல் ஒளிவீசும் பலநிற வண்ணங்களால் விளங்கும் பறவைக் கூட்டங்கள் இறக்கைகள் ஆகாயத்திலுள்ள மேகங்களும் வெட்கப்பட, இருண்ட கூந்தலில்-நெருங்கிச் செருகிய தூய நறுங் கொண்டையை யுடையவள். கடைக்கண் நோக்கினுல் கடுமையான தவச்சிரேஷ்டர்களின் சித்தத்தையும் க்ஷணநேரத்தில் கலங்கச் செய்யும் அரிய கெண்டை மீன் போன்ற விழியுடையாள்.

33-38 (திருநீற்......நகையாள்)

திருநீற்றின் ஒளியுடன் சிந்துரமும் சிறந்து அருள்ஒலி பிரகாசிக்கும் அழகிய மூன்றும் பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியையுடையவள்; பாம்பின் மாணிக்கத்தை யொத்த ஒளிவீசும் மாணிக்கக்கல் பதித்த ஆபரணத்தையணிந்து ஒளி விளங்கும் நாசியாள். தந்தத்தையும் முல்லை மலரையும் தோற்கச் செய்யும் வெண்மையானதும் அழகு விளங்கும் பரிசுத்தமான பற்களையுடையவள்.

39-45 (அருளுரை......மார்பினுள்)

அருளினுல் உரைக்கும் வாக்குவன்மையும் அரியகலைச் சொற்களைப் பேசும் தெளிவு பொருந்தச் சிறக்கும் சிறந்த செவ்வாயையுடையவள்; வெண்மணியும் செம்மணியும் நீலக்கருமணியும் வலிமை மிகுந்த மணியும் பச்சை நிறம் வாய்ந்த அழகிய மணியும் வளைமணியும் குலமணி, பாசிக் குன்றிமணியுடன் நலம் விளங்கக் கோத்த பற்பலவாகிய ஆரங்களை அணிந்து அழகு விளங்கக் காட்சி தரும் மார்பகத்தையுடையவள்.

46-48 (பணியணை......னிடையாள்)

பாம்பணையில் பள்ளி கொண்ட பரந்தாமனுக்குரிய சங்கு, சக்கரம் முத்திரை பொறித்த புயமுடையவள்; அழகு பொங்கும் மாணிக்க ஒட்டியாணத்தைத் தரித்த சிறிய இடையை யுடையவள்.

49-52 (மந்திரப்......பதத்தாள்)

மந்திர சக்தி வாய்ந்த பிரம்பும் வேம்பிலைக் கொத்தையும் தந்திரம் புரியும் மாத்திரைக் கோலும் அழகிய கரத்தில் தரித்து மகிழ்பவள் ; சிறந்த சிலம்பு ஒலிக்கும் மென்மையான மலர் போன்ற பாத முடையவள் ;

53-68 (அணிபதச்......வந்தனளே)

அழகிய பாதச் சங்கை ஒலிக்கும்படி நடக்கும் நடையையுடைய வள். இரண்டு விழிகளின் நோக்கினால் தேவர்களும் ஏங்கவும், புருவத்தை நெளிப்பதால் பூவுலக மக்கள் மயங்கவும் அழகிய புன் சிரிப்பால் மகரிஷிகளும் கலங்கவும் மெல்லிய குரலால் குயிலை யொத்தவள் ; மயக்கும் ஒய்யாரத்தை யுடையவள் ; தனக்கு எவரும் நிகராகார் என்ற வகையில் திருக்குறத்தின் முறையைச் சொல்லுதற்கு அரிய பல்வேறு குறிகளால் விளக்கி பாரத தேசத்தில் உள்ள ஐம்பத்தாறு தேசங்களிலும் சென்று வலிமைமிக்க அரசர்களரல் பரிசும் புகழும் பெற்று விரும்பிய மக்கள் கேட்கும்போது, கைக்குறி மெய்க் குறி, விழிக்குறி, மொழிக்குறி மைக்குறி மூன்று காலங்களையும் உரைக்கும் குறி, இவைகளில் விரும்பியதைச் சொல்ல, திருவேற் காட்டில் வாழும் தேவி கருமாரியின் திருநாமத்தைக் கருத்தில் இருத்தி உண்மையான குறியுரைக்கும் வித்தகத் தன்மை பொருந்திய வஞ்சி-பண்ணில் சிறந்த குறவஞ்சியாகிய பாவை வந்தனள் என்பதாம்.

## குறத்தி வருகை அறிவித்தல்

விருத்தம் கவிவாக்கியம்

அருள்மலருந் திருமேனி அழகன்தன் திருவடியை
அன்போங்கும் அகத்தில் எண்ணி
மருள்மலரும் மதனவல்லி மாரவேள் கணைப்பட்டு
மயலோங்கிக் கலங்கும் வேளை
இருள்விலக்கும் செங்கதிரோன் வலம்புரியும் வேங் [கடத்துச்
சாரலினில் வாழ்கு றத்தி
தெருள்விளக்கும் மாத்திரைக்கோல் கரமேந்தி மணிக் [கூடை
இடையேந்தி வருகின் றாளே

**கருத்து :** அருள் மலர்ச்சி பெறும் அழகிய மேனியுற்ற அழகனாகிய சிவபெருமானின் திருவடியை அன்பு பொருந்திய தனது மனத்தில் நினைந்தும் மயக்கம் மலர்ச்சி பெறும் மதனவல்லி மன்மதனின் பாணத் தினால் மையல் ஓங்கிக் கலங்கும் போது இருளை விலக்கும் சூரியன் வலமாக வரும் திருவேங்கட மலைச்சாரலில் வாழும் குறத்தி-தெளிவு

பொருந்த விளக்கும் மாத்திரைக் கோலைக் கரத்தில் ஏந்தி, அழகிய கூடையை இருப்பில் ஏந்தி வருகின்றுள்.

## தோழியர் சொல்வது

பல்லவி :

பூங்குற வஞ்சி வந்தாள்—தென்றல்தவழ்
பூமலர்ச் சோலையிலே

அநுபல்லவி :

ஓங்காரி யைப்பாடி உயிர்க்கெலாம் அருள்நாடி
பூங்காவில் அசைந்தாடும் பூங்கொடியது போல (பூங்)

சரணம் 1

மஞ்சள் நிறைமுகத்தில் மாரிக் குங்கும மின்ன
மந்திரம் ஓதும்வாயில் முல்லை வெண்பற்கள் துன்ன
செஞ்சொல்லால் எண்திக்கும் ஜெயங்கொண்ட
மாவஞ்சி
சுந்தரம் மிகுவஞ்சி அபரஞ்சி சீர்வஞ்சி (பூங்)

சரணம் 2

இருகண் சிமிட்டினுல் ஏழுலகும் மயக்கி
இன்னிசை ஒலிகூட்டி இயல்நடம் நடித்து
அருட்செல்வி கருமாரி அன்னையின் அடிபோற்றி
மின்னொளி வேகத்தில் அருட்குறம் பலசொல்லும்
(பூங்)

**கருத்து:** அழகிய குறவஞ்சி, தென்றல் தவழ்ந்து வீசும் பூஞ்சோலையில் வந்தாள்.

ஓங்காரத் தத்துவத்துக்குரிய கருமாரித் தேவியைப் பாடிக் கொண்டு எல்லா உயிர்களுக்கும் அருளை நாடிய வண்ணம் பூஞ்சோலையில் அசைந்தாடும் பூங்கொடியைப் போல வந்தாள்; மஞ்சள் நிறைந்த முகத்தில் கிருஷ்ணமாரியின் குங்குமம் மின்னவும், மந்திரத்தைச் சபிக்கும் வாயில் முல்லை போன்ற வெண்ணிறப் பற்கள் காட்சி தரவும் செம்மையான குறமுரைப்பதால் எட்டுத்திக்கும்ஜெயக் கொடி நாட்டிய வஞ்சி-அழகு மிகுந்த வஞ்சி-பொன் ஆபரணம் பூண்ட மேன்மை மிகுந்தவஞ்சி வந்தாள். இரண்டு கண் சிமிட்டினுல் ஏழு உலகத்தையும் மயக்கி இனிய இசையை ஒலி கூட்டி இலக்கணப்படி நடனம் புரிந்து அருட் செல்வியாகிய கருமாரித் தேவியின் பாத

கமலங்களைப் போற்றி மின்னொளி வேகத்தில் பல வகையான அருட் குறம் உரைக்கும் பூங்குறவஞ்சி வந்தாள் என்றவாறு.

## தோழியர் வரவேற்க மதனவல்லிமுன் குறத்தி தோன்றுதல்

விருத்தம் கவி வாக்கியம்

வேதவன வீதி தன்னில்
வித்தார நடைந டக்கும்
போதமொழிப் பூங்கு றத்தி
பூவையின் வருகை கண்டு
காதலார் சேடிக் கூட்டம்
களிப்புற முகமன் கூற
நாதனை நினைந்து வாடும்
நங்கைமுன் தோன்றி னாளே.

**கருத்து:** உத்தர வேதாரண்யம் (திருவேற்காட்டு) தெருவில் விஸ்தார நடை நடந்து ஞானமொழி பேசும் அழகிய குறங்கூறும் பெண்ணின் வருகையைக் கண்டு அன்பு மிகுந்த சேடியர் கூட்டம் மகிழ்ச்சியுரையும் உபசார வார்த்தைகளையும் கூறி வரவேற்கவும், சிவபெருமானை நினைந்து வாடும் மதனவல்லி முன் குறவஞ்சி தோன்றினாள். என்பதாம்.

## குறத்தி சொல்வது—பாட்டு

இமயமுதல் குமரிவரை எங்களது நாடு
எழில்அமரர் முனிவரெலாம் ஏத்துகின்ற நாடு
சமயமெலாம் பிரம்மமொன்றே எனச்சாற்றும் நாடு
சகமுய்ய வழிவகுக்கும் வேதம்வாழ் நாடு
தமிழ்முதலாம் தெய்வமொழி பலவளரும் நாடு
தந்திரமும் மந்திரமும் செழிக்கின்ற நாடு
சமயமறிந் தறம்வளர்க்கும் தருமகுணச் சீலர்
சந்ததமும் வாழ்கின்ற பாரதநன் னாடே.

**கருத்து:** பொருள் வெளிப்படை. பாரத நாட்டின் சிறப்பைக் கூறி வந்த முறைமை என்பதாம்.

விடையோனின் குருவாகி விளங்குகின்ற வேலன்
வேங்கை மரமாகி நின்ருன் வள்ளிதனை மணந்தான்
படையாறு மலைப்பரிசில் வேலவர்க்குத் தந்தோம்
பனிமலைவாழ் பரமனுக்குப் பேருறவா யானேம்
கடைக்கண்ணல் காத்தருளும் காமாட்சி யம்மை
கயற்கண்ணி பகவதிக்குக் குலச்சொந்த மானேம்
குடையாகக் குன்றேந்திக் காத்த மாமன் வாழும்
குளிர்சோலை வேங்கடமா மலைஎங்கள் மலையே.

**கருத்து :** நந்திமீது வரும் சிவபெருமானுக்கும் குருவாகிய முருகன், வேங்கை மரமாகி மாயம் புரிந்து எங்கள் குலத்துப் பெண்ணுகிய வள்ளியை மணந்தான்; ஆறுபடை வீடுகளையும் சிறந்த பரிசாக வேலவனுக்குக் கொடுத்தோம்-இமயமலையில் வாழும் பரமசிவனுக்குப் பொருந்திய பந்துவானேம்-கண்நோக்கால் அருள் புரிந்து காக்கும் காமாட்சி யம்மை, கயற்கண்ணி (மீனுட்சி) பகவதி முதலியவர்களுக்குக் குலச் சொந்தமானேம். குன்றைக் குடையாகக் கையில் ஏந்தித் திருவிளையாடல் புரிந்த மாமனுகிய திருமால் வாழும் குளிர்ந்த சோலை சூழ்ந்த திருவேங்கடமலை எங்கள் மலை அம்மே-என்று தான் வாழும் வேங்கடமலையின் சிறப்பைப் பாடிக் கொண்டு வந்தாள் என்றவாறு.

வேங்கையுடன் பூங்குறிஞ்சி செங்காந்தள் முகிழ்க்கும்
வேங்கையுடன் கலைமானும் விளையாடி மகிழும்
தூங்குபலாச் சுளைவெடிக்கும் தேனமுதம் ஒழுகும்
பாங்கிலுறும் மந்தியெலாம் விருந்துண்டு பழகும்
ஓங்கருவி நீர்விழுங்கால் வெண்முத்தந் தெறிக்கும்
ஒளிக்கதிரோன் எழுவண்ணம் ஒளிவீசிச் சிரிக்கும்
மூங்கிற் புதரெழும் காற்றின் ஏழிசையைக் கேட்டு
முதுநாகம் மகிழ்ந்தாடும் வேங்கடமா மலையே.

**கருத்து :** வேங்கைப் பூக்களும் அழகிய குறிஞ்சியும் செங்காந்தளும் மலரும், வேங்கைப் புலியுடன் கலைமானும் தங்களின் பகைமையை மறந்து விளையாடி மகிழ்ச்சியில் ஈடுபடும். தொங்குகின்ற பலாக் கனிகளிலிருந்து பலாச்சுளை வெடிக்கும். அதின்மேல் தேன் கூடுகளினின்று மலைத்தேன் ஒழுகிய வண்ணம் இருக்கும். பக்கத்திலுள்ள குரங்குக் கூட்டங்கள் எல்லாம் விருந்தாக அதனை உண்டு பழகும். உயர்ந்த அருவி நீர் உயரத்திலிருந்து விழும்போது நீர்த் துளிகள் வெள்ளிய முத்துக்களைப் போன்று தெறிக்கும். பிரகாசிக்கும்

கதிர்களை உடைய சூரியன் ஏழுநிறக் கதிர்கள் ஒளி வீசிச் சிந்த, நீர் முத்தங்களில் காட்சியளித்து சிரிக்கும். மூங்கில் புதரில் இருந்து வரும் காற்றின் ஏழு இசையையும் கேட்டு வயதான நாகங்களும் மகிழ்ந்து ஆடுந் திருவேங்கடமலை என்றவாறு.

திருவேங்கடமலையில் உள்ள இயற்கையழகைக் கற்பனைத் திற முடன் விற்பனத்தால் கவிபாடும் வண்ணம் என்பதாம்.

ஞாலம்புகழ் எழுமலையின் பேரழகைக் கண்டு
நெடியமேகம் ஒன்றுகூடி சிகரமிசை யண்டும்
நீலமயில் கண்டு நடம் ஆடக் குயில் பாடும்
கோலக் கிளி கொஞ்சுமொழி கண்ணன் நாமங் கூறும்
காலன்மேனி போல் கறுத்த கரிமதத்தால் பிளிறும்
கடுவன் முழவொலி என்று கைத்தாளம் போடும்
மாலோன்முன் காலோடு செருக்குரைத்துத் தோற்ற
மாச்சேடன் மலையாகும் வேங்கடமா மலையே.

**கருத்து:** உலகம் புகழும் ஏழுமலையின் (திருப்பதி மலையின்) சிறந்த அழகைக் கண்டு பெரிய மேகங்கள் ஒன்ருகக் கூடிச் சிகரமிசைப் பொருந்தும். நீலமயில் கண்டு நடனம் புரியும். குயில் இசையைப் பாடும். அழகிய கிளிகள் இனிய மொழியைக் கொஞ்சும் போதெல் லாம் கண்ணனின் திருநாமத்தைக் கூறும். இயமனின் மேனி போன்று கரிய நிறமுடைய யானை மும்மதத்தால் ஓசையிடும். ஆண் குரங்கு முழவொலியையும் மிஞ்சவல்ல சப்தத்தைக் கைத்தாளம் போட்டு முழக்கும். திருமாலின் முன்னிலையில் வாயு பகவானுடன், கர்வங் கொண்டு உரைத்துத் தோற்ற ஆதிசேஷன் மலையாகி விளங் கும் திருவேங்கட மலையாகும் என்பதாம்.
வி-ரை,

கிளியும் கண்ணன் நாமங்கூறும் என்பதாம்.

கடுவன் - ஆண் குரங்கு - கால்-காற்று. மாச்சேடன் - பெருமை மிகுந்த ஆதிசேஷன். கோலக் கிளி-அழகிய கிளி.

குறத்தி தான் வாழும் திருவேங்கட மலையில் இயற்கையழகை மேலும் சிறப்பித்தவாறு என்பதாம்.

தினைப்புனத்தில் புள்ளோச்சி ஆலோல மிசைப்போம்
தினைமாவும் தேனுடனே கிழங்குகனி உண்போம்
சினவேங்கை சீறிவரப் பெருமுறத்தா லடித்து
செந்நெல்கதிர் களம்காத்துக் கூலமெலாம்
கொணர்வோம்

வனங்கடந்து வயல்கடந்து வரைகடந்து திரிவோம்
வேந்தரையும் வசமாக்கும் மந்திரங்கள் வரைவோம்
மனமடக்கி மதிதிருத்த மாயமெலாம் புரிவோம்
மஞ்சள்கனி சஞ்சீவி மருந்தாக அளிப்போம்

**கருத்து :** பூங்குறத்தி தங்கள் குலப் பெண்கள் அருஞ் செயல்களைக் குறிப்பிட்டவாறு.

தினைப்புனத்தில் பரண் மீதிருந்து பறவைக் கூட்டங்களை ஓச்சி ஆலோலம் பாடுவோம். தினைமாவும் தேனுடன் பல்வேறு கிழங்குகளும் கனிவர்க்கங்களும் உண்போம். கோபம் மிகுந்த வேங்கைப் புலி சீறித்துரத்தி வரும்போது பெரிய முறத்தால் அடித்துத் துரத்தி விட்டு செந்நெல் கதிர் கட்டுகள் நிறைந்த களத்திலிருந்து காத்து தானியங்களை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்ப்போம். காடுகளைக் கடந்து வயல்களைக் கடந்து மலைகளைக் கடந்து திரிவோம். அரசர்களை வசப்படுத்தும் மந்திரங்களை எழுதுவோம். மனத்தை ஒருநெறிச் செலுத்தவும் மதியைத் திருத்தவும் பலவேறு மாயங்களைப் புரிவோம். மஞ்சள், கனி இவற்றைச் சஞ்சீவி மருந்தாகக் கொடுப்போம்,

எட்டுதிக்குப் பாலகரும் கண்டு களிகூர
ஏழிரண்டு லோகந்தன்னைக் காட்டி மறைப்போமே
இட்டகுல தெய்வமெல்லாம் எழுந்தருளச் செய்வோம்
இமைநொடியில் சஞ்சீவி மூலிகையை அழைப்போம்
சுட்டதிரு நீறெடுத்து நாற்புறமும் தூவி
இட்டசித்தி பெறச் செய்வோம் எட்டுசித்தும் புரிவோம்
அட்டாட்ட லீலைபுரி தேவி கிருஷ்ணமாரி
அருளாலே முக்காலப் பொருளுரைப்போம் அம்மே!

**கருத்து:** எட்டுதிக்குப் பாலகர்களும் கண்டு களிப்படையும்படி பதினாலு லோகங்களையும் காட்டி மறைப்போம்; இஷ்ட தெய்வங்களையும் குல தெய்வங்களையும் எழுந்தருளச் செய்வோம், சுட்ட திருநீற்றை எடுத்து நான்கு புறமும் தூவி அன்பர்கள் இஷ்டசித்தி பெறும்படி செய்வோம்; எட்டு வகையான சித்துக்களையும் செய்வோம். அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் புரியும் தேவி கிருஷ்ண மாரியின் அருளினால் மூன்று காலத்தின் பொருள்களையும் சொல்லுவோம் என்று தாங்கள் புரியும் சமர்த்தான காரியங்களின் சாகச வித்தையைக் கூறியவாறு என்பதாம்.

எட்டுதிக்குப் பாலகர். இந்திரன் முதல் ஈசானன் வரை.
ஏழிரண்டு லோகம். மேல் ஏழு லோகமும், கீழ் ஏழுலோகமும்.
சுட்டதிருநீறு - கருமாரித் திருநீறு - விவரம் திருச்சாம்பர் அர

வணக்கும் முறையில் கரிண்க.

எட்டு சித்துக்கள் அணிமா முதலிய எட்டு சித்துக்கள். கிருஷ்ணமாரி-நலமளிக்கும் மாரி-கிருஷ்ணனின் தங்கையாகிய மாரி எனினும் பொருந்தும் என்பதாம்.

## மதனவல்லி குறத்தியிடம் சொல்வது

விருத்தம்

வேங்கடமா மலைவாழ்ந்து வேற்காட்டுச் சோலைவந்து
விந்தையெலாம் புரியும் வஞ்சி
பாங்காரும் கோல்தூக்கிக் கரம்பார்த்து முக்காலப்
பொருளுணர்த்த வல்ல பாவாய்
தீங்ககற்றும் கருமாரி திருவருளால் மேதினியில்
திருக்குறத்தைச் சாற்றும் செல்வி
ஓங்குமுளத் தென்னெண்ணம் கைகூடிச் சீர்பெறுமோ
உண்மைநிலை உணர்த்து வாயே.

**கருத்து:** திருவேங்கட மலையில் வாழ்பவள்; திருவேற்காட்டுச் சோலைக்கு வந்து பற்பல அற்புதங்களைச் செய்யும் குறவஞ்சி-பக்குவமான மாத்திரைக் கோலை தூக்கிக் கைபார்த்து மூன்று காலத்தின் பொருளையும் உணர்த்த வல்ல பெண்ணே! தீயவினைகளைப் போக்கும் கருமாரித் தேவியின் திருவருளால் இந்த மண்ணுலகத்தில் திருக்குறம் சொல்லும் செல்வி! என் உள்ளத்தில் ஓங்கி வளரும் எண்ணம் கைகூடி மேன்மை பெற முடியுமா என்ற உண்மை நிலையை உணர்த்துவாயே.

## குறத்தி பூஜைமுறை உரைத்நல்

இல்லத்தை அலங்கரித்துத் திருவிளக்கை ஏற்றி
யானைமுகப் பெருமானை எழுந்தருளச் செய்வாய்
பல்வண்ண நறுமலரும் வெற்றிலையும் பாக்கும்
பழவர்க்கம் மஞ்சள்கனி திருமஞ்சள் வைப்பாய்
தொல்பிணியைத் தீர்த்தருளும் வேம்பிலையும் பிரம்பும்
தீஞ்சுவைசேர் கரும்புடனே இளநீரும் வைப்பாய்
நல்ல புதுமுறந் தனிலே எழுநாழி நெல்லை
நலந்திகழும் இருகரத்தால் அள்ளிவைப்பாய்
அம்மே

**கருத்து :** வீட்டை அலங்காரம் செய்து திருவிளக்கை ஏற்றி பிள்ளை யாரை எழுந்தருளப் பண்ணி புஷ்ப வகைகளுடன் வெற்றிலை பாக்கு பழவர்க்கம் எலுமிச்சம்பழம் மஞ்சள் வேப்பிலை பிரம்பு கரும்பு இளநீர் இவற்றை வைப்பாய். நல்ல புதிய முறத்தில் ஏழு நாழி நெல்லை இரண்டு கரத்தாலும் அள்ளி வைப்பாய் என்பதாம்.

**வி-ரை :** வீட்டை அலங்கரித்தல் - பசுஞ்சாணத்தால் தரையை மெழுகிக் கோலமிட்டு வாயிற்படியில் மஞ்சள் குங்குமம் இடுதல்.

திருவிளக்கு - குத்துவிளக்கு - பதிவிளக்கு - மஞ்சள்கனி - மஞ்சள் நிறம் பொருந்திய எலுமிச்சம்பழம். தொல்பிணியைத் தீர்த்தருளும் வேம்பிலை - பூர்விக வினைகளைத் தீர்க்கும் சக்தி படைத்த வேம்பிலை - வேம்பிலைக்கு பாரசக்தி என்ற பெயர் உண்டு முழுவிவரம் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணத்தில் காணலாம் - ஏழு நாழி நெல்-என்றது ஏழு சத்தியாக விளங்குகின்றாள் கருமாரியாதலால் என்க. ஏழு சத்தி—அந்தரி, வானத்தி பார்ப்பனி, காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, கருமாரி ஆகிய எழுவர் என்க.

## குறத்தி சொல்வது

மனமொன்றித் திருவிளக்கின் ஜோதிநிலை காண்பேன்
முன்னவனும் மயிலவனும் முன்தோன்றி நிற்பார்
புனலருவி வேங்கடம்வாழ் சீநிவாசப் பெருமான்
பெருங்கருடன் மீதமர்ந்து அருள்காட்சி தருவார்
அனமமர்ந்து கலைமகளும் சத்தியரும் வருவார்
அணிவிடையில் வேதபுரி அத்தனவர் வருவார்
புனற்சடையாள் வேற்காட்டுக் கருமாரி வருவாள்
பூரண நல் வாக்களிப்பாள் வாழ்வளிப்பாள் அம்மே,

**கருத்து :** உள்ளம் ஒன்றிய வகையில் திருவிளக்கின் ஒளியைக் காண்பேன். அப்படிக் காணும்போது, விநாயகனும் முருகனும் ஒரேவரையில் தோன்றுவார்கள். அருவிகள் சொரியும் திருவேங் கடமலையில் வாழும் சீநிவாசப் பெருமான் சீதேவி பூதேவியுடன் பெரிய கருடன் மீது அமர்ந்து வந்து அருள்காட்சி, அளிப்பார். அன்ன வாகனத்தில் கலைவாணியமர்ந்து வர, பல சத்தியர்களும் சூழ்ந்து வருவார் அழகிய எருதின்மீது வேதபுரி நாதனும் வருவார். கங்கையைச் சடையில் தரித்தவளும் திருவேற்காட்டில் திருக் கோயில் கொண்டவளுமாகிய தேவி கருமாரி வருவாள். அந்த தேவி முழுமையான நல்வாக்கு அளிப்பாள் வேண்டிய வாழ்வையும் அளிப்பான் என்றவாறு.

வி-ரை அன்னம். அனமென வந்தது-வாக்களித்து வினைதீர்ந்து வரம் வழங்கிக் காத்தருளும் கருமாரியானதால் பூரண நல்வாக்கு அளிப்பாள்-வாழ்வளிப்பாள் என்று அம்மே என்பதாம்.

## குறவஞ்சி பூஜை

ஐங்கரர்க்கு எருக்கமலர் அறுகுதும் பைசாத்தி
அருமறை மந்திர மோதி மலர் தூவிப் போற்றி
மாங்கனி பலாவாழை கனிகள் நிவேதித்து
மாங்கல்ய மஞ்சள் கனிதாம்பூலம் வைத்து
ஓங்குநறும் புகைகாட்டிக் கற்பூரம் ஏற்றி
ஒளிவிளக்கின் சுடர்முனையில் உள்ளத்தை நிறுத்தி
வேங்கடத்தா னுடன்பிறந்த கிருஷ்ணமாரித் தானை
விநயமுடன் வழிபட்டாள் வாழ்த்து குறவஞ்சி.

**கருத்து :** எடுத்த காரியங்கள் தங்கு தடையின்றி நிறைவேற விநாயகப் பெருமானை வழிபடுவது மரபு-அவருக்குரிய எருக்கமலர் அறுகு தும்பை ஆகியவைகளைச் சாத்தி அரிய வேத மந்திரங்களை ஓதி புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சித்து, மாங்கனி, பலா, வாழை தாம் ஆகிய கனிகளை நிவேதித்து மங்களந்தரும் மஞ்சள், கனியுடன் பூலம் வைத்து, உயர்ந்த நறும்புகையாம் சாம்பிராணி தூபம் காட்டி, கற்பூரத்தை ஏற்றி ஒளி பொருந்திய திருவிளக்கின் சுடர்முனையில் உள்ளத்தை நிறுத்தி திருவேங்கடத்தில் வாழும் சீநிவாசனுடன் பிறந்த கிருஷ்ணமாரித் தேவியின் பாதத்தை விநாயமுடன் வழிபட்டாள் வாழ்த்திப் போற்றும் குறவஞ்சி-என்பதாம்.

## குறத்தி குறி சொல்வது

பாட்டு—கவிவாக்கியம்

நிறையோசை வாத்தியங்கள் நேமமுடன் முழங்க
நெஞ்சுருகித் தன்மயமாய் நாரணனை நவின்றாள்
குறைபோக்கி நிறைவாக்கி நலந்தரும் நன்னாமம்
கோவிந்தா கோவிந்தா என்றெளிக்கும் நாமம்
மறைகாத்த வேங்கடவன் நாமம் எனப் போற்றி
மனமொழிமெய் மூன்றாலும் மாட்சி நிலைபெற்று
பொறை மனத்தோர்க்கிஷ்டசித்தி பூரணமாய் அருளும்
பால கிருஷ்ணமாரி பதம் பணிந் தேத்தி நின்றாள்.

**கருத்து :** மங்களமான ஓசை நிறையும் வாத்தியங்கள் நியமப்படி முழங்க நெஞ்சம் உருகித் தன்மயமாய் நாரணனின் திருநாமத்தைச் சொன்னாள். மக்களின் குறைகளை எல்லாம் போக்கி வேண்டியதைக் கொடுத்து நிறைவாக்கி நன்மையைத் தரும் நல்ல நாமம் கோவிந்தா கோவிந்தா என்று ஒலிக்கும் நாமம். வேதங்களைக் காத்த திரு வேங்கட மலையில் வாழும் சீநிவாசனின் திருநாமம் என்று போற்றி மனம், வாக்கு, காயம் மூன்றாலும் தூய்மையுடனும் பக்தியுடனும் வழி பட்டு பொறுமையுடன் இருக்கும் மனமுடையவர்களுக்கு இஷ்ட சித்தியைப் பூரணமாக அருள் புரியும் இளமையான கிருஷ்ணமாரி பாதத்தைப் பணிந்து ஏத்தி நின்றாள்.

## குறவஞ்சி குறியுரைத்தல்

ஓங்காரி கருமாரி முத்திரையைப் பெற்ற
உயர்போத மாத்திரைக்கோல் வலக்கரத்தில் ஏந்தி
ஓங்கருள்சேர் விழிநோக்கால் வல்லிதனைக் கண்டு
உரைக்கின்றாள் குறிதன்னை வேங்கடமா வஞ்சி.

## குறத்தி கையைக் காட்டச் சொல்வது

நீங்காத செல்வத்தை நித்தியமாய்ப் பெற்று
நல்லறத்தை நிதம்வளர்த்து நலம்பெருக்கும் கையை
பூங்காந்தள் மெல்விரல்கள் பொருந்துகின்ற கையை
பூங்கையைக் காட்டுகெனக் காட்டினளே பாவை.

**கருத்து :** ஓங்கார நாதத்தில் விளையாடும் கருமாரித் தேவியின் முத்திரையைப் பெற்று உயர்ந்த ஞான மாத்திரைக் கோலை வலக்கை யில் ஏந்தி அருள் ஓங்கும் விழிநோக்கினால் மதனவல்லியைக் கண்டு வேங்கடத்திலிருந்து வந்த குறவஞ்சி உரைக்கின்றாள். நீங்காத செல் வத்தை என்றும் பெற்று நல்ல தர்மத்தை தினந்தோறும் வளர்த்து நன்மை பெருக்கும் கையை - பூங்காந்தள் போன்ற மைல் விரல்கள் பொருந்துகின்ற அழகிய கையைக் காட்டுக என்றுரைத்தவுடன் மதனவல்லி கையைக் காட்டினள்.

## குறத்தி சொல்வது

திருமாலின் சங்காழி கமலரேகை கையே
சிவநாதன் திரிசூலம் சிலையிரேகைக் கையே
அருந்தவர்க்கும் அற்றவர்க்கும் அன்னமிடும் கையே
அவனியினில் நிலைவாழ்வு பெறத்துடிக்கும் கையே

இருநிதியும் பெரும்புகழும் ஏற்குமிந்தக் கையே
இசையறிந்து இறையேத்தி யாழ்மீட்டும் கையே
கருமாரி திருநீறு பெற்றுய்யும் கையே
கருவறியா நெறியுடையார் கரமேற்கும் கையே.

**கருத்து :** பொருள் வெளிப்படை

சகம்புகழும் அருள்வாக்கு கருமாரி வாக்கு
சைகைநிலை கண்டுணர்ந்து சாற்றுகின்ற வாக்கு
இகபரத்து நல்வாழ்வை உணர்த்தும் அருள்வாக்கு
எழுவரிலே இளைய கருமாரியவள் வாக்கு

அன்றொருநாள் ஆற்றேரம் வண்ண மலர்ச்சோலை
அழகுமுழு மதிதோன்றும் அந்திமாலை வேளை
வென்றி வெள்ளெருதின்காளை வீதிவரக் கண்டு
உளம்திகைத்து வாடி நின்ருய் உள்மயக்கம் கொண்டு.

**கருத்து :** பொருள் வெளிப்படை

## மதனவல்லி சொல்வது

விருத்தம்

சோலை வேற்காட்டு வீதி சுந்தரன் வருகை கண்டு
மாலையில் மயக்கம் கொண்டு மனம்வாடி நிற்பதுண்டோ
வேலைசூழ் உலகில் உன்போல் வீண்புகழ் உரைப்பார் உண்டோ
வாலைஎன் உள்ளம் தேரா வேடிக்கைக் குறியு ரைத்தாய்.

**கருத்து :** சோலைகள் சூழ்ந்த திருவேற்காட்டு வீதியில் சுந்தரனின் வருகையைக் கண்டு மாலை நேரத்தில் மயக்கம் கொண்டு மனம் வாடி நிற்கலாமோ? கடல் சூழ்ந்த உலகத்தில் உன்னைப்போல வீண் புகழாகிய (தற்பெருமையை) உரைப்பார் உண்டோ? இளமைப் பிராய முடைய எனது உள்ளம் தேராத நிலையில் வேடிக்கையான குறி யுரைத்தாய் என்றவாறு.

## குறத்தி செயல்

கவி வாக்கியம்—விருத்தம்

தேராத குறமு ரைத்தாய் எனுமுரை செவியிற் கேட்டு
பாராத புதுமைக் காட்சி பார்த்தவர் வியந்தாற் போலும்
ஓராத உணர்வி னாலே உரைத்தவன் நிலையை எண்ணி
வாராத சினத்தி னாலே வீறுடன் உரைத்தாள் வஞ்சி.

**கருத்து :** தெளிவு பெருத குறத்தைச் சொன்ஞய் என்ற சொல்லை செவியிற் கேட்டவுடன் பாராத புதுமைக் காட்சிகளைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டது போலும் ஆராய்ச்சியில்லாத உணர்விஞலே உரைத்தவனின் நிலையை நினைந்து என்றும் தனக்கு வாராத சினத்தி ஞலே வீறு கொண்டு குறவஞ்சி சொல்லத் தொடங்கினுள்.

வி-ரை: தேராத குறம், பாராத புதுமை, ஓராத உணர்வு, வாராத சினம் நயம் சிந்திக்கத் தக்கது.

## குறத்தி சொல்வது

உள்ளத்தில் பூத நாதன் உலாநிலைக் காட்சி கண்டு
கள்ளமில் லாத உள்ளம் கணத்தினில் மாற்றம் கொண்டு
எள்ளிஞய் அனங்க வேளை எழில்மதித் தென்றற் காற்றை
உள்ளதோ அலவோ என்று உண்மையை விளம்பு வாயே.

**கருத்து :** மனக்கண்களால் பூதநாதன் உலாவந்த நிலையான காட்சியைக் கண்டு குற்றமில்லாத உள்ளம் கணத்தினில் மாற்றம் பெற்று மன்மதனையும் சந்திரனையும் காற்றையும் எள்ளி உரையாடி ஞய்! இது உண்மையா இல்லையா என்று சொல்லுவாய் என்ருள்.

## மதனவல்லி சொல்வது

விருத்தம்

கன்னியாங் கருமா ரித்தாள் கருதியே வாழு கின்ற
கன்னியாய் விளங்கு மென்னைக் காமியென் றேவு ரைத்தாய்
மன்னிதில் கண்டபூத நாதனின் ஊரும் பேரும்
அன்னவன் அடையாளங்கள் அறிவிப்பாய் அகவன் மாதே.

**கருத்து :** கன்னியாகிய கருமாரித் தேவியின் பாதங்களைக் கருதி வாழும் கன்னியாகி விளங்கும் என்னைச் காமி என்று உரைத்தாய். நிலையாக நீ கண்ட அந்த பூத நாதனின் ஊரையும் பேரையும் அவன் அடையாளங்களையும் அறிவிப்பாய் என்பதாம்.
வி-ரை: அகவன் மாது-குறத்தி.

## குறத்தி சொல்வது

அருள்வாக்கில் ஊரும் பேரும் அறையலாகுமோ!
அன்னவனை நீயறிந்தாய் நான் அறிந்தேனே
கருமாரித் தேவியவள் கருணையினலே
கருத்தில் நீ கொண்டவனைக் கணித்துரைப் பேனே.

**கருத்து :** அருள்வாக்கு உரைக்கும் போது ஊர் பேர் இவற்றையும் சொல்லலாமோ? நீ கருத்தில் கொண்டவனின் பேரையும் ஊரையும் நீ அறிந்தாய்; நான் அறிந்தேனே (இல்லையே என்றபடி) என்றாலும் கருமாரித் தேவியின் கருணையினாலே கருத்தில் நீ கொண்டவனைக் கணித்துச் சொல்லுவேன் என்றபடி.

மாவேத மோதுகின்ற மந்திரக்காரன் அவன்
மகசாலச் சித்துபுரி தந்திரக்காரன்
மூ நாதந் துடியொலித்துக் கொட்டியாவொன் அவன்
மஞ்சள்புலித் தோலுடுத்தி மாட்டிலேறுவான்.

**கருத்து :** சிறந்த வேதங்களை ஓதும் மந்திரக்காரன். பெரிய ஜாலங்களைப் புரிகின்ற சித்துபுரிகின்ற தந்திரக்காரன். மூன்று நாதங்களை எழுப்பும் துடியை ஒலித்துக் கொட்டி யாடுவான். மஞ்சள் நிறம் வாய்ந்த புலித்தோலை உடுத்தி எருதில் ஏறுவான்.

| | | |
|---|---|---|
| வி-ரை மாவேதம் - | வேத, | வேத புரிநாதன் |
| சித்துபுரி | புரி | என மறைமுகப் |
| மூ நாதர் | நாதர் | பொருள் உணர்த்தல் காண்க |

வெள்வேல மரக்காட்டில் உலாவிவருவான்
விஷப்பாம்பை பணியாகப் பூண்டு களிப்பான்
வெள்ளெலும்பு மாலைசூடி வேதாளியோடு
விளையாடும் வேடன் வலை சிக்கினாய் அம்மே!

**கருத்து :** வெள்வேல மரக்காடு. (திருவேற்காட்டில்) உலாவி வருவான். விஷம் பொருந்திய பாம்பை ஆபரணமாகப் பூண்டு களிப்பான். வெள்ளெலும்பை மாலையாகச் சூடி வேதாளியுடன் (பூத வேதாள கணங்களுடன்) விளையாடுகின்ற வேடன் வலையிற் சிக்கினாய் என்பதாம்.

### மதனவல்லி சொல்வது

ஊரும் பேரும் கணித்துரைப்பேன் என்றுரைத்தாயே
—எந்தன்
உள்ளத்தில் உள்ளதை நீ கண்டுரைத்தாயோ
வீரப்பு வீண் ஜாலப் பேச்சினால் கொஞ்சி
வஞ்சிக்கும் வஞ்சியென வந்தாயோ வஞ்சி

**கருத்து :** பொருள் வெளிப்படை

வி-ரை வஞ்சனை செய்யும் வஞ்சியென்று வந்தமோ வஞ்சி என்ற நயம். 'வீரப்பு, வீண் ஜாலம்' என்ற உலக வழக்குச் சொற்கள் சிந்தனைக்குரியது.

எந்தன் முன்னே எள்ளிநகைக் குறும்புரைக்கவே
இறுமாப்பும் பெருந்துணிவும் நீ எத்தனை கொண்டாய்
சிந்தித் தறியாது குறம் செப்பித் திரியும் உன்
சாகஸமும் தந்திரமும் செல்லுமோ பேதாய்

**கருத்து :** பொருள் வெளிப்படை

### குறத்தி விளக்கம்

மா வேத மோதுமென்னும் வேதமும் முன்னே
மக சித்துபுரி யூராம் புரியும் மின்னே
மா நாதந் துடி ஒலிக்கும் நாதனும் மன்னே
மணவாளன் வேதபுரி நாதனும் அன்னே.

**கருத்து :** பொருள் வெளிப்படை

| | |
|---|---|
| மாவேதம்<br>மகசித்து புரி<br>மாநாதன் | 'வேதபுரிநாதன்' என வருதல் காண்க.<br>நீ நினைந்த மணவாளன் வேதபுரிநாதன் என்றபடி. |

### மதனவல்லி மகிழ்ச்சி

நாதனின் நாமம் கேட்டாள் நாணினுள் கவிழ்ந்தாள் வல்லி
ஆதவன் வருகை கண்ட அம்புயம் எனமகிழ்ந்தாள்
கோதிலா மணியும் முத்தும் கோத்தநல் லார மீந்தாள்
மாதவள் பூங்கு றத்தி மகிழ்வுடன் ஏற்ருள் மாதோ.

**கருத்து :** வேதபுரிநாதனின் திருநாமத்தைக் கேட்டவுடன் வெட்கப் பட்டு தலை குனிந்தாள் மதனவல்லி. சூரியனின் வருகையைக் கண்ட தாமரைபோல் உளம் மகிழ்ந்து மணியும் முத்தும் கோத்த ஆரத்தைப் பரிசாகக் கொடுக்கவும் குறத்தி அதனை மகிழ்ச்சியுடன் ஏற்ருள் என்பதாம்.

### மதனவல்லி மார்க்கம் வினவுதல்

கவி வாக்கியம்

வஞ்சியாள் மகிழும் காலை வல்லியாள் விரக மோங்கி
நெஞ்சினில் நினைந்த எண்ணம் நிலையுற எய்து தற்கு
அஞ்செழுத் துடைய நாதன் அமலனை அடையும் மார்க்கம்
செஞ்சொலால் உரைக்க என்ன வஞ்சியும் செப்ப லுற்ருள்.

**கருத்து:** குறவஞ்சி ஆரத்தைப் பெற்று மகிழ்ச்சியடைந்த போது, மதனவல்லி விரகதாபத்தால் மேன்மேல் வருத்த மடைந்து மனத்தில் நினைத்த எண்ணம் நிலை பொருந்த அடைவதற்கு ஐந்தெழுத்துக் குரிய சிவநாதனை அடைகின்ற மார்க்கத்தை செஞ்சொல்லினால் உரைக்க என்னவும் குறவஞ்சி சொல்லலானாள்.

### குறவஞ்சி வல்லிக்குக் கூறுதல்

இராகம் : காம்போதி தாளம் : ஆதி

பல்லவி :

அம்மனைச் சரணடைவாய்—கிருஷ்ணமாரி
அம்மனைச் சரணடைவாய்

அநுபல்லவி :

இம்மை மறுமைக்கும் இன்னருள் புரிதேவி
அம்மையென் றேத்துவோர்க்கு அருட்பதம் அருள்மாரி
(அம்மனைச்)

சரணம் : 1

பங்கயம் மலர் யமுனை மார்கழிநன் னீராடி
பதிவேண்டிப் புதுமணல் பாவை உருவமைத்து
மங்களக் காத்தியாயினி மகாமாயையைப் பாடி
மாயக் கண்ணனைச் சேர்ந்தார் கோபிமார் ஒரு கோடி
(அம்மனைச்)

சரணம் : 2

பூவிரி சோலைசூழும் பொய்கையினில் நீராடி
பாவை நோன்பியற்றிப் பாவைப்பாடல் பாடி
காவிரியில் கண்வளரும் கருமுகிலைக் கொண்டாள்
கன்னியர் புகழ்கின்ற கருணைக்கவி ஆண்டாள்
(அம்மனைச்)

கலிகாலக் கொடுமையை கணத்தினில் போக்கியே
கருணைத் திரிசூலம் வேற்காட்டில் நாட்டியே
நலியும் உயிர்கட்கு நல்லருள் பொழிகின்றாள்
நாரணியைப் பூசித்தால் நலம் பெறலாம் என்றும்
(அம்மனைச்)

**கருத்து :** ஸ்ரீ கிருஷ்ணமாரி அம்மனைச் சரணமடைவாய் என்றாள். இப்பிறவிக்கும் மறுபிறவிக்கும் இனிய அருளைப் புரியும் தேவி அம்மா என்று பணிவோர்க்கு அருட்பதம் அளிப்பவளைச் சரணடைவாய் என்பதாம்.

ஆதியில் தாமரைமலர் மலர்கின்ற யமுனா நதியில் நீராடி, நாதனை அடைவதற்கு, மணலால் பாவை உருவமைத்து மங்கள மிகுந்த காத்யாயினி விரதமிருந்து மஹாமாயையைப் பாடி, மாயம் புரியும் கண்ணனை அடைந்தார் ஒரு கோடி கோபியர்கள் என்பதாம்.

பிறகு மலர்ச் சோலைகள் சூழும் தடாகத்தில் நீராடி திருப்பாவை பாடி பாவை நோன்பு புரிந்து காவிரியில் கருநீலவண்ணனாய் அறிதுயில் புரியும் அரங்கநாதனை அடைந்தாள் கன்னியர்கள் போற்றும் கருணைக் கவியாய் விளங்கும் ஆண்டாள் என்பதாம்.

கலிகாலத்தின் கொடுமையைக் கணநேரத்தில் போக்கும் கருணை வாய்ந்த திரிசூலத்தைத் திருவேற்காட்டில் ஊன்றி, நலிகின்ற உயிர்களுக்கு நல்ல அருளைப் பொழிகின்றாள். அத்தகைய நாரணியைப் பூசித்தால் எப்போதும் நலம் பெறலாம் என்பதாம்.

எனவே மார்க்கம் காட்டிய படியாம்.

## எல்லோரும் புற்றுள்ள இடத்திற்கு போதல்

கவி வாக்கியம்

பூவிலுறும் பூவையர்கள் புண்ணியமும் பெருநோன்பும்
இயற்றுமுறை புகன்றாள் வஞ்சி
நாவிலுறும் வார்த்தையெலாம் நிலைவேத வாக்கியமாய்
நயங்கண்டு நியமம் ஏற்றுக்
காவிலுறும் வேற்காட்டு நாரணியைக் கருநாக
வடிவாகிக் காட்சி நல்கிக்
கோவிலுறும் கோவிந்தன் சோதரியைக் கருத்திருத்திப்
போற்றி வந்தாள் மதனவல்லி.

**கருத்து :** பூமியில் வாழும் பெண்கள் புண்ணியத்தையும் நோன்பையும் செய்யும் முறையையும் சொன்னாள் குறவஞ்சி. அவள் நாவிலிருந்து வந்த வார்த்தைகளை நிலைத்த வேத வாக்கியமாய் அவற்றின் நயத்தைக் கண்டு தீபம் ஏற்றி, திருவேற்காட்டுச் சோலையில் பொருந்திய நாரணியைக், கருநாக வடிவாகிக் காட்சி தந்து, திருக்கோவிலில் வாழும் கோவிந்தன் சகோதரியைக் கருத்தில் இருத்திப் போற்றி வந்தாள் மதனவல்லி என்பதாம்.

## கருமாரி துதி

தந்திமுகன் கந்தநாதன் தாள்பணியுந் தேவி
தவமுனிவர் அகத்தியர்க்குத் தமிழளித்த தேவி
மந்திரமாம் மஞ்சள் கனி அளிக்கின்ற தேவி
மாநாகம் விஷந் தீண்டாப் பதிவாழும் தேவி
சந்தமிசைத் துடியைவலத் தேந்திமகிழ் தேவி
சயமுழங்கும் திரிசூலம் இடத்தேந்தும் தேவி
சுந்தரவாள் கரம்பற்றும் ஞானசக்தி தேவி
திருக்கபால மொரு கரத்தி லேந்திமகிழ் தேவி

ஓங்கார நாத வடிவான சக்தி தேவி
ஒளிவிளக்கில் விளையாடும் அருட்சோதி தேவி
ரீங்காரத் தொனிவிரும்பும் எண்குணத்துத் தேவி
ஏழிசையில் நடம்புரியும் எழுசக்தி தேவி
தேங்குபுகழ் வேற்காட்டுப் புற்றில்வளர் தேவி
திருக்கோயில் கொண்டோங்கும் கருமாரித் தேவி
வேங்கடத்தான் சோதரியாய் வந்தமாரித் தேவி
வினைதீர்க்கும் எங்கள்குலக் கருமாரித் தேவி.

## பெண்கள் புற்றுக்கு பூசை செய்வது

ராகம் : கீரவாணி      தாளம் : ஆதி

அருளோங்கும் திரிசூலச் சக்தியைக் கண்டார்
அருமறையாம் வெள்வேலத் தருவையுங் கண்டார்
பெருவேம்போ டரசமரக் காட்சியைக் கண்டார்
பைந்தமிழ் வளர்த்த முனி பாதம் நினைந்தார்
கருநாகம் வாழ்கின்ற புற்றினைக் கண்டார்
கண்டுகளித்தானந்தக் கடலினி லாழ்ந்தார்
அருள் மஞ்சள் கரங்கொண்டு பூசியே நின்றார்
அழகுதரும் குங்குமமாம் திலகமும் இட்டார்.

ராகம் : கேதாரகௌளம்      தாளம் : ஆதி

இருபுறமும் திருவிளக்கு ஏற்றியே நின்றார்
ஒருமனதாய் எல்லோரும் சுற்றியே வந்தார்
அருட்பிரம்பும் வேம்பிலையும் சாத்தியே நின்றார்
அணிமஞ்சள் கனியோடு பாக்கிலை வைத்தார்

அருக்கியமாய் ஆவின்பால் அரவுக் கீந்தார்
அருத்தியுடன் அனம்படைத்தார் அடிபணிந்தார்
திருநாகமணி யன்ன விளக்கி லாடும்
திருக்காட்சி கண்டவுடன் சிந்தை குளிர்ந்தார்

திருநீற்றுச் சாம்பவியாள் உளம்மகிழ்ந்து
தாள்பணிந்தார் அனைவருக்கும் தரிசனம் தந்தாள்.

**கருத்து:** பொருள் வெளிப்படை

விருத்தம் : புன்னாகவராளி

தேவர்கள் தேவி வந்தாள்
செங்கண்மால் தங்கை வந்தாள்
மூவர்கள் முதல்வி வந்தாள்
முக்கண்ணி வாலை வந்தாள்
ஜீவர்கள் உய்ய வந்தாள்
சிவசத்தி கிருஷ்ண மாரி
நாவலந் தீவோர் போற்றும்
நற்கலை நடம்பு ரிந்தாள்.

**கருத்து:** தேவர்கள் போற்றுந் தேவியாய் விளங்குபவள் வந்தாள். திருமாலின் தங்கை வந்தாள். மூவர்களுக்கு முதல்வி வந்தாள். மூன்று கண்ணுடைய வாலை வந்தாள். உயிர்கள் எல்லாம் கடைத்தேறுவதற்கு சிவசக்தியாயும் கிருஷ்ணமாரியாயும் வந்தாள். பாரத தேசத்தோர் போற்றும் நல்ல பரதக்கலையால் நடனம் புரிந்தாள் என்பதாம்.

## அம்பிகை நடனம்

பல்லவி :

நாக நடனம் ஆடினாள்—கரு
நாக நடனம் ஆடினாள்

அநுபல்லவி :

நாக மாகிய புற்றமர்ந்து ஞாலம் காக்கும் நாதசக்தி
(நாக)

சரணங்கள் :

தேவ சக்தி மூல சக்தி சத்துசித்தா னந்த ரூபி
ஜீவர்வாழ இச்சைஞானக் கிரியையாகி நின்ற சக்தி
(நாக)

மூவரின் தொழில் நடத்தி மும்மடந்தை யாகிநின்று
தேவரும் விரும்பும் செல்வம் தேசு வீரம் வித்தையீந்து
(நாக)

புற்றிலிருந் தாட்சி செய்து போத சித்து பல இயற்றி
பற்றறுத்த நெஞ்சில் வாழ்ந்து பதமளிக்கும் பழைய மாரி
(நாக)

### அம்பிகை சொல்வது

பல்லவி : ராகம் : தோடி தாளம் : ஆதி

நாதனுடன் ஒன்றுவாயே - சின்மயனும் வேதபுரி

அநுபல்லவி :

காதலால் கசிந்துருகிக் கரணமெலாம் கரைந்து
வேதனுர் விதிமுறையின் முன்தவப் பயன் நிறைந்து
(நாத)

சரணங்கள் :

பூதலந் தன்னில் பிறந்து புண்ணியப் பயன் பெற்ருய்
பூவையர் குலத்துக்கோர் பெருவிளக்காய் உற்ருய்
(நாத)

மாதாவென் றெனை நாடும் மாந்தருக் கருளோங்கும்
மனத்தூய்மையால் பணிவோர் வாழ்வின்
திருவோங்கும் (நாத)

### அம்பிகை அருள்வாக்கிட்டு மறைதல்

மாதவனின் அருளுரையைத் தவப்பயனுல்
வஞ்சிவாய் மலரக் கேட்டோய்
வேதபுரிப் பெருமானே வல்லிஉனை யாட்கொள்வான்
அறிவாய் என்ருள்

வேதமொழி கோவிந்தா கோவிந்தா கோவிந்தா
எனஓ லித்து
மாதவனின் சோதரியாள் ஒளியாகி அரைக்கணத்தில்
மிளிர்ந்தாள் அன்றே.

**கருத்து:** சீநிவாசப் பெருமானின் அருள் கனிந்த சொற்களை, தவப் பயன் மிகுதியால், குறவஞ்சியாய் ஒலிக்கக் கேட்பவளே! வேத மந்த்ர மொழியாம், கோவிந்தா கோவிந்தா கோவிந்தா என்று ஒலித்து மாதவனுகிய ஸ்ரீநிவாசப் பெருமானின் சோதரியாளாகிய ஸ்ரீ கிருஷ்ணமாரி சோதிமயமாகி அரைக் கணத்தில் பிரகாசித்தாள் என்பதாம்.

**இமய மலையினின்று சிங்கன் வருதல்**

மங்கையர் குலத்துக் கெல்லாம்
மாமணி மதன வல்லி
சங்கரன் அருளைப் பெற்றுத்
தனிமகிழ் வெய்தி நின்ருள்
சங்கரி கிருஷ்ண மாரி
திருப்புகழ் பாடி யாடி
சிங்கனும் மலையி னின்று
சிறப்புடன் வருகின் ருனே.

**கருந்து:** பெண்கள் குலத்துக்கு சிறந்த மாணிக்கம் போன்று விளங்கிய மதனவல்லி, (குறவஞ்சி சொன்ன வண்ணம் ஸ்ரீ கிருஷ்ணமாரித் தேவியைத் துதித்து வழிபட்டு அவள் பேரருளினுலே தான் நினைந்த வண்ணம்) வேதபுரிநாதனின் அருளைப் பெற்று ஒப்பற்ற சந்தோஷக் கடலில் ஆழ்ந்தாள். சங்கைக் கரத்தில் ஏந்தும் அரியாம் ஸ்ரீநிவாசப் பெருமானையும் அவன் தங்கையாகிய ஸ்ரீ கிருஷ்ணமாரியையும் பாடிக் கொண்டே மலையிலிருந்து சிங்கன் வருகின்ருன்.

மாதவனே குறத்தியளாய் மாமதன வல்லிக்கு
அருள்வாக்கு இயம்பிச் சென்ருன்
வேதத்தின் முழுமூலச் சிவநாதன் இமவரையி
னின்றிறங்கி வையம் வாழ
போதமுறும் விளையாடல் புரிந்தருள வுளங்கொண்டு
துடிநாதந் தனையெ ழுப்பி
வேதவொலி மிகுந்தோங்கும் பாரதநன் ருடெங்கும்
சிங்கனென வருகின்ருனே.

**கருத்து:** சீநிவாசப் பெருமானே குறவஞ்சியாகி மதனவல்லிக்கு அருள்வாக்கு உரைத்துச் சென்ருள். வேதங்களின் மூலப்பரப்பொருளாகிய சிவபெருமான், இமய மலையிலிருந்து உலகம் வாழ்வதற்கு ஞானத்திஞல் திருவிளையாடல் புரிந்தருள்வதற்குத் திருவுள்ளங் கொண்டு உடுக்கையினுல் ஒலியை எழுப்பி, வேத ஒலி மிகுந்து ஓங்கும் பாரத தேசமெங்கும் சிங்கஞக உலாவி வருகின்ருன் என்றவாறு.

எழுகடல்சூழ் நிலவுலகில் பல்லாடல் புரிந்தருளும்
நுதல்விழியன் சீவ நாதன்
எழுவரினும் இளையகரு மாரியளின் நாமத்தை
இன்னேசை ஒலிக்கப் பாடி
விழுமியதோர் சடைதுலங்க வில்லம்பு புயமேந்தி
விஞேதமுடன் ஆடி யாடி
அழுதரற்றித் தவம்புரிந்த காண்டீபன் முன்வந்த
வேடன்போல் சிங்கன் வந்தான்.

**கருத்து:** எழுச்சிபெற்று அலைவீசும் கடல் சூழ்ந்த பூவுலகில் பற்பல திருவிளையாடல் புரிந்து அருள்புரியும் நெற்றிக் கண்ணஞகிய சிவபெருமான், எழு சத்தியர்களிலும் இளையவளாகிய கருமாரியின் திருநாமத்தை இனிய ஓசை ஒலிக்கும்படி பாடி சிறந்த சடை விளங்கக் காட்சி தரவும் வில்லையும் அம்பையும் தோளில் ஏந்திய வண்ணம் விஞேதமுடன் ஆடியாடிக் கொண்டு, பூர்வத்தில் அழுது அரற்றித் தவம் செய்த அர்ஜுனன் முன் வந்து தோன்றிய வேடன் போல் சிங்கன் வந்தான்.

வி-ரை 'தவம் புரிந்த காண்டீபன் முன்வந்த வேடன்போல்' என்பதால் ஏற்கனவே வேட உருவங் கொண்டவன் இப்போது குறவஞக வந்தது புதியதல்ல. பழமையே என்றபடி.

### நொண்டிச்சிந்து

ஆதிப் பெருஞ் சுடலை—அங்கு
ஆனந்த தாண்டவம் புரிதேவி
சோதி ஒளி வீசும்—சுத்த
தத்துவ மாமாயை மாரியவள்
நீதி நிலை நிறுத்தும்—நீலி
நித்திய சுகமளி நாரணியாள்
வேதியன் மாலோனும்—தேவி
வேற்காட் டரசியென்றே போற்றிடுவார் (ஆதி)

எழு நாதச் சத்தியவள்—எங்கும்
இன்னிசை வடிவாய்த் திகழ்ந்திடுவாள்
அழுவோர்க் குறை தீர்ப்பாள்—அருளால்
அற்புதம் பற்பல ஆற்றிடுவாள்
விழுச்சிலம் பொலி பதத்தாள்—அன்பால்
வீரக் குறமுரைப் போர் நாவிலிருப்பாள்
எழு லோகம் புகழ்மாரி—இமையவர்
ஏத்தித் துதிக்கின்ற கருமாரி (ஆதி)

வேத முதல்வியவள்—வேற்காட்டில்
வித்தார மண்டபத்தில் வீற்றிருப்பாள்
வேதனைத் தீர்த்தருள் வாள்—வினையை
வேரறக் களைந்தருள் புரிமாரி
சோதனை மிகப் புரிவாள்—துயர்களை
துடைத்து வரமருளும் சுந்தரியாள்
சாதனை மிகப் புரிவாள்—சத்திய
தத்துவ ரூபியாம் சகமாரி (ஆதி)

உடுக்கை ஒலிகேட்டு—உடன்
ஓங்கார முன்வரும் கருமாரி
இடுப்பில் குறக் கூடை—கரத்தில்
எழில்வேம்பு பிரம்பினை ஏந்திடுவாள்
சடுதியில் வரமருள்வாள்—சங்கரி
திரிசூலம் கரத்தேந்தி நடம்புரிவாள்
அடுத்தோர் வினைதீர்க்கும் அன்னை
அகிலத்தில் யாருண்டு அறைகு வீரே (ஆதி)

கருநாக ரூபங் கொண்டு—புற்றில்
கணக்கிலா யுகங்கள் வாழ்ந்தவளாம்
கருணை சிவமாரி—கலியில்
கேட்ட வரமளிக்கும் கிருஷ்ணமாரி
இருவினை தீர்த்திடுவாள்—உலகில்
எங்கும் நிறைந் தருளும் மூலசக்தி
திருவேற் காட்டினிலே—அருளால்
திரிசூலம் ஊன்றித் திருக்கோயில்
கொண்டாள் (ஆதி)

மஞ்சள்கனி யளிப்பாள்—மங்கையர்
மனக் குறை தீர்க்கும் மகமாரி
அஞ்செழுத் தெட்டெழுத்தாள்—ஆதி
அமலனும் கமலனும் அடிபணிய
செஞ்சொல் குறமுரைக்கும்—தேவி
சிங்காரப் புன்னகை பூத்தவளாம்
நெஞ்சாரம் போற்றிடுவோர்—நினைவில்
நிலைத்து நடமிடும் நீலியவள் (ஆதி)

கூழுக்குக் குறம்பாடும்—மாரி
குறையெலாந் தீர்த்தருள் குண்டலியாம்
ஊழுக்கும் ஊழ்வகுப்பாள்—உகர
உத்தமி இவட்கிணை உலகிலுண்டோ
ஏழு மலைமேலே—வாழ்வோர்க்
கிளையளென்றே யுரைத்து மகிழ்பவளாம்
ஏழு பிறவிப் பிணி—நீற்றினல்
இமைநொடிப் போதில் தீர்த்தருள்வாள் (ஆதி)

கற்பூர மாரியவள்—கருத்தில்
கருதினேர்க் கிரங்கும் கருமாரி
பற்பல விளையாடல்—பாரில்
பாங்குறப் புரிந்தருள் பெருமாரி
சிற்றம் பலத்துறையும்—தேவி
சிவசக்தி சிவகாமி இவளன்ருே
கற்ருேர் கருத்துறையும்—மாரி
கலையெலாம் அளித்தருள் கருமாரி (ஆதி)

அருட்குற முறையுணர்த்தும்—அன்னை
ஆதிப் பெருங் கிழவி சோதிவடிவாய்
திருவிளக் கினில் நிற்கும்—தேவி
திருமாரி பெருமாரி தேவியவள்
கருமாரி என வந்தாள்—கலியில்
கண்கண்ட கருணைத் தெய்வமிவள்
திருப்பதம் தினம் போற்றி—நமது
சிந்தை மகிழ்வோம் உலகீரே (ஆதி)

**கருத்து:** பழைய பெரிய சுடலையில் எக்காலத்தும் ஆனந்தத் தாண்டவம் புரிந்து கொண்டிருக்கும் தேவி. சோதி ஒளி பிரகாசிக்கும் வகையில் சுத்த தத்துவ மகாமாயையாகிய மாரியவள்; உலகத்தில் நீதியை நிலை நிறுத்தும் நீலியாய் என்றும் நிலைத்த சுகமளிக்கும் நாரணியாள். பிரமனும் திருமாலும் திருவேற்காட்டு அரசி என்று போற்றிடும் 'ஆதி'க்கும் ஆதியாகிய சக்தி.

ஏழுநாதச் சத்தியாய் விளங்குபவள். எங்கும் இனிய இசை வடிவாக விளங்குபவள். அழுது தொழும் அடியார்களின் குறையைத் தீர்ப்பவள். தனது அருள் திறத்தினுல் எத்தனையோ அற்புதங்களைச் செய்வாள். சிறந்த சிலம்புகள் ஒலிக்கும் திருப்பாத கமலத்தாள். அன்பினுல் வீரம் குறையாத அருட் குறமுரைப்பவர் நாவில் இருப்பாள். ஏழு உலகங்களும் புகழும் மாரி. தேவர்கள் எப்போதும் போற்றித் துதிக்கும் மாரி.

வேதங்களுக்கு எல்லாம் முதல்வியவள். திருவேற்காட்டில் விசாலமாகிய மண்டபத்தில் வீற்றிருப்பாள். வேதனைகளை எல்லாந் தீர்த்து அருள் புரிவாள். மக்களின் வினைகளை வேரற நீக்கும் அருள் புரியும் மாரி. மிகவும் சோதனையைச் செய்வாள் என்ருலும் துயர் மெல்லாவற்றையும் துடைத்து வரம் அருளும் சுந்தரியாள். அளவு கடந்த சாதனையைப் புரிபவள். சத்திய தத்துவ ரூபியாகிய சகமாரி.

உடுக்கையின் சப்தத்தைக் கேட்டவுடனே, ஓங்காரமுடன் வரும் கருமாரி. இடுப்பில் குறக் கூடையும் கையில் அழகிய வேம்பும் பிரம்பும் ஏந்தி வருவாள். சீக்கிரத்தில் வரம் கொடுப்பாள். திரிசூலத்தைக் கையில் ஏந்தி திருநடம் புரியும் சங்கரியாக விளங்குவாள் தன்னைச் சரணம் என்று அடைந்தவர்களின் வினையைத் தீர்க்கும் கருமாரி அன்னையைப் போல் உலகத்தில் யார் இருக்கிருர்கள் சொல்லுவீரே என்றபடி.

கருத்த பாம்பு வடிவங் கொண்டு புற்றிலேயே எத்தனையோ யுகாந்த காலங்கள் வாழ்ந்தவளாம். கருணை வடிவாகிய சிவமாரி. கலியுகத்தில் அன்பர்கள் கேட்ட வரத்தையளிக்கும் கிருஷ்ணமாரி. வினைகளைத் தீர்ப்பாள். உலகில் எங்கும் நிறைந்து அருள்புரியும் மூல சக்தி. திருவேற்காட்டுத் திருத்தலத்தில் தனது அருள் திறத்தால் திரிசூலம் நாட்டி (அன்பர்களின் தீராவினைகளைத் தீர்த்துத்) திருக்கோயில் கொண்டவள்.

பெண்களின் குறை தீர்ப்பதற்கு மகாமாரியாக நின்று மஞ்சள், கனியை அளிப்பாள்; அஞ்செழுத்துக்கும் எட்டெழுத்துக்கும் அதீதமாகியவள். ஆதி நாரணனும் பிரமனும் பாதங்களைப் பணிந்து

போற்றவும், செம்மையான சொற்களினுல் குறம் உரைக்கவும் தேவி அழகிய புன்னகை பூத்துப் பொலியுற்ற முகத்துடன் காட்சி தரு பவள். மனதாரப் போற்றுபவர்களின் நினைவில் நிலைத்து நடம்புரியும் நீலியவள்.

கூழுக்குக் குறம்பாடும் மாரியாய், எல்லாக் குறைகளையும் தீர்த்து அருள்புரியும் குண்டலியாய், ஊழ்வினைக்கும் ஊழ்வகுப் பாள். உகரத்தின் உத்திமியாய் விளங்கும் இவருக்குச் சமானமாக உலகிலுண்டோ? இல்லை என்றபடி. ஏழுமலை மீது வாழும் சீநிவாசப் பெருமானுக்கு இளையவள் என்றே சொல்லி மகிழ்பவள். ஏழு பிறவி களின் பிணியையும் திருநீற்றினுல் இமை நொடிப் போதில் தீர்த்து அருள்வாள்.

கற்பூர மாரியாய்க் கருத்தில் கருதும் அடியார்களுக்கு இரங்கும் கருமாரி. பற்பல திருவிளையாடல்களை உலகில் பக்குவமாய் புரிந்தரு ளும் பெருமாரி. திருச்சிற்றம்பலத்தில் வாழும் தேவி. சிவசக்தியாகிய சிவகாமி இவளல்லவா? கற்ருேரின் கருத்தில் நிலைத்து வாழும் மாரி. எல்லாக் கலையையும் அளித்து அருள் புரியும் கருமாரி.

அருட்குற முறையுணர்த்தும் அன்னையாய் பழைய பெரிய கிழவி யாய், சோதிவடிவாய், திருவிளக்கில் நிற்கும் தேவியாய், அழகிய மாரியாய், பெருமாரியாய் விளங்கும் தேவியவள். கருமாரி என்ற திரு நாமந்தாங்கி வந்தாள். கலியுகத்தில் கண்கண்ட கருணை வடிவாகிய தெய்வமிவளின் திருப்பாதங்களை தினந்தோறும் போற்றி நமது சிந்தை மகிழ்ச்சி பெறுவோம் உலகத்தவரே என்றபடி.

வி-ரை: வித்தார மண்டபம்: கொலுவீற்றிருந்து அருளாட்சி புரிபவள் என்பது விளங்க வித்தார மண்டபம் என உரைத்ததாம்.

அஞ்செழுத்து எட்டெழுத்தாள்—சிவசக்தியாயும் நாரணியாயும் விளங்குகின்றவள் ஆதலின் அஞ்செழுத்துக்கும் எட்டெழுத்துக்கும் மேலானவள் என்றவாறு.

ஊழுக்கும் ஊழ்வகுப்பாள். ஊழ்வினையை நீக்கி தானே விதி வகுக்கும் திறம் படைத்தவள்.

தெய்வம் நினைத்தால் ஊழ்வினையை நீக்குவது எளிது.

‘ ஊழ்வினையை நீக்கி உலவாத பேரின்ப
வாழ்வு தரும் செய்ய மலர்முகம் ’

என்ருர் முருகன் அடியார் என்க.

## சிங்கன் சிங்கியைத் தேடுதல்

திரைச்சிந்து பாலாழி கடைந்தருளும் காலத்தில்
சேயிழையாய் வந்த தேவன்
இரையொலிசெய் பதுமசுரன் சிவநாதன் தனைத்தேட
ஏந்திழையாய் வந்த நாதன்
விரைமலரைக் குழல்சூடி விந்தைபல புரிகின்ற
வஞ்சியென வந்தான் என்று
குரைகழலோன் சிவநாதச் சிங்கனவன் சிங்கியளைக்
குவலயத்தில் தேடி னனே.

**கருத்து:** அலைகள் வீசும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் மோகினியாக வந்த தேவனும், உரத்துக்கூவி கொண்டே பதுமா சூரன் சிவபெருமானைத் தேடப் புறப்பட்ட காலத்தில் மோகினியாக வந்த நாதனும் உள்ள ஸ்ரீமந்நாராயணமூர்த்தி, வாசனை பொருந்திய நல்ல மலர்களைக் கூந்தலில் சூடி, பற்பல விநோதங்களைப் புரிகின்ற குறவஞ்சியாக வந்தாள் என்பதை, ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த சிவநாதச் சிங்கன் சிங்கியாகிய குறவஞ்சியைத் தரணி எங்கும் தேடலானான்.

வி-ரை: பூர்வகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் ஒன்றுய்க் கூடி அமிர்தத்தை அடைவதற்கு திருப்பாற்கடலைக் கடைந்தார்கள்; அசுரர்கள் ஒருபுறமும் சுரர்கள் ஒருபுறமும் பொருந்தி மேருமலையை மத்தாகவும், வாசுகியை நாணுகவும் கொண்டு கடைந்தார்கள். திருப் பாற்கடலினின்று விஷம் புறப்பட்டது. அதனல் யாருந் தீங்கடையாத படி சிவபெருமான் தானே அதனை உண்டார். அமுதத்தைப் பங் கிட்டு அளிப்பதற்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி மோகினி வடிவங் கொண்டு வந்தார்.

பத்மாசூரன் என்ற அரக்கன் சிவபெருமானை நோக்கிப் பல ஆண்டுகள் தவம் புரிந்தான். சிவபெருமான் பிரசன்னமாகி என்ன வரம் வேண்டும் எனக் கேட்டார். அரக்கன், சிவனைப் பார்த்து, நான் யார் தலைமீது கைவைத்தாலும் அவர்கள் பஸ்மீகரமாய்ப் போய்விட வேண்டும். அந்த வரத்தைக் கொடுங்கள் என்றுன். சிவபெருமான் அவ்வரத்தைக் கொடுத்தார். உடனே அக்கொடிய பாதகன் சிவ பெருமான் மீது கையை வைத்து பஸ்மீகரமாச் செய்வதற்குப் புறப்பட் டான். சிவபெருமான் உடனே தன்னைக் காத்துக் கொள்ளும் நிமித்தம் ஐவேலங்காயில் ஒளிந்து கொண்டார். அப்போது அவ்வசுரனை உபாயத்தால் அழித்து சிவனைக் காக்கும் நிமித்தம் மோகினியாய் வடிவெடுத்துச் சென்றுர் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி.

கலியுகத்தில் மக்கள் வினைப்பயனால் துன்புறுதிருக்க, அருள் வாக்கு உரைத்து வாழ்வளிக்கும் நிமித்தம் குறவஞ்சியாக வடிவெடுத் தான் என்றவாறு.

மக்களைக் காப்பது தனது கடமையாகக் கொண்டதால் காத்தல் கடவுள் என்றவாறு.

ஸ்ரீ கிருஷ்ணனே குறவஞ்சியாகி மாரியின் பிரபாவத்தை பிரபஞ் சத்தில் வெளிப்படுத்தலால் ஸ்ரீகிருஷ்ணமாரி குறவஞ்சி என்றபடி.

ஸ்ரீகிருஷ்ணமாரியை உபாசிக்கும் வேங்கடமலைவாழ் (சீநிவாசனா கிய) குறவஞ்சி என்றலும் பொருந்தும்.

பாரதத்தில் எண்ணேழு தேயமெங்கும் பரிவோடு
  திரிந்தலைந்து தேடுங் காலை
நாரதரின் நல்லிசையை விஞ்சுகின்ற பெருங்கானம்
  நாரணியாள் உவக்கும் வண்ணம்
பாரதத்தின் பெருஞ்சக்தி பராசக்தி சிவசக்தி
  பரப்பிர்ம தேவ தேவி
மாரதத்தி கிருஷ்ணமாரி என்றேத்தி ஐயப்ப
  மாமூலன் வருகின்றானே.

**கருத்து :** பாரத தேசத்திலுள்ள ஐம்பத்தாறு தேசமெங்கும் பரிவு கொண்டு எங்கும் சுற்றித் திரிந்து அலைந்து தேடும் போது நாரதரின் கானத்தை மிஞ்சும் பெருமை பொருந்திய கானத்தினால் நாரணியாகிய கருமாரி மகிழும் வண்ணம், பாரத தேசத்தின் பெருமை வாய்ந்த சக்தியே, சிவசக்தியே, பரப்பிரம்மமாய் விளங்கும் தேவ தேவி, பெரிய ரதத்தில் வருபவளே கிருஷ்ணமாரி என்று போற்றி ஐயப்பன், மூலன் என்ற வடிவு கொண்டு வந்தான் என்றவாறு.

வி-ரை : மாரதத்தி பெரிய ரதத்தில் அமர்ந்து வரும் தேவி. ஆனந்த ஞான ரதத்தில் அமர்ந்துவரும் ஸ்ரீ கிருஷ்ணமாரி என்றபடி. மாரதர் கள் போற்றும் மகமாயி என்றலுமாம். மேன்மை பொருந்திய ரதத்தில் வருபவள் எனினும் பொருந்தும்.

### மூலன் கிருஷ்ணமாரியைத் துதித்துப் பாடுதல்

சங்கரி சங்கரி சாம்பவி எண்குணி
மங்களச் செல்வி மாமக மாயி
வேதமூ லத்தின் வித்தே முத்தே
நாத விந்து வடிவே நாரணி

காரண காரியங் கடந்த மாரி
பூரண ஞானப் பொருளே அருளே
ஓமெனும் பிரணவத் துட்பொரு ளாயினை !
ஓமெனும் ஓசையில் ஒளிர் நடம் புரிவோய் !

ஐந்தலை நாகம் அணிந்த மாரி
ஐந்தெழுத் தெட்டெழுத் ததீத மாரி
ஐவரை ஈன்ற அருட்பெருஞ் சோதி
ஐஞ்சத்தி யாயொளிர் அனாதி மாரி!

நாகரூ பங்கொள் நாரணி காரணி
சோகந் தவிர்க்கும் நீறணி சுந்தரி
திரிசூலங் கரத்தில் ஏந்திய தேவி
திரிநேத்ர தாரி சகம்புகழ் மாரி!

பூரணச் சின்மயப் புண்ணிய மாரி
ஆரணன் நாரணன் அங்கணன் போற்றும்
அன்னையே உன்னை அறிந்தோர் உளரோ !
கன்னல்வில் காமர்க் கருளிய மாரி !

நவக்கோள் புகழும் நாத நாயகி !
பவந்தவிர் மாரி புராதன மாரி
வேம்பிலைப் பிரம்பால் வினையைத் தீர்த்தருள்
சாம்பவி சதுர்முகற் கருளிய தேவி !

சரணம் சரணம் சரணம் மாரி
சரணம் சரணம் சரணம் தேவி
சரணம் சரணம் எனப்பணிந் தேத்தினன்
சரணம் என்றே சகம்புகழ் தேவனே.

**கருத்து:** சங்காரம் செய்யும் சிவனையும் சங்கைக் கரத்தில் தரித்த சங்கரியாயும் சாம்பர் அளிக்கும் சாம்பவியாயும், எண்குணச் செல்வி யாயும் விளங்கும் தேவி ! சர்வ மங்களங்களை அளித்துக் காக்கும் பெரிய மகமாயி ! வேத மூலங்களின் வித்தாகவும், முத்தாகவும் விளங் குபவளே ! நாத விந்து வடிவாகிய நாரணி! காரணமுங் காரியமுங் கடந்த மாரியாய் முழுஞானப் பொருளாய் விளங்கி அருளேயாகி வீற் றிருப்பவளே ! ஓம் என்ற பிரணவத்தின் உட்பொருளாகி விளங்கு பவளே ! ஓம் என்ற ஓசையில் சிறந்த நடம்புரிபவளே ! ஐந்துதலை

நாகத்தைத் தலையில் அணிந்தவளே! சிவாய நம என்ற ஐந்தெழுத்துக்கும் ஓம் நமோ நாராயணு என்ற எட்டெழுத்துக்கும் மேலானமாரி! பிரம, விஷ்ணு, ருத்திர மகேஸ்வர, சதாசிவாதிகள் ஐவரைப் பெற்ற அருள்பெருஞ் சோதிப் பிழம்பே! இச்சை, ஞானம், கிரியை, ஆதி, பரை என்ற ஐந்து சத்தியாய் விளங்குபவளே! நாக ரூபங் கொண்ட நாரணி! சோகத்தைத் தவிர்த்து நலமளிக்கும் திருநீற்றை அளிக்கும் மாரி—திரிநேத்ரதாரி..........................................சரணம் சரணம் சரணம் தேவி என்று பலவாறு போற்றிப் பணிந்தான்.

வி-ரை: உலகமெல்லாம் சாமியே சரணம் ஐயப்பா என்று போற்றும் பெருமை பெற்ற ஐயப்பனுகிய மூலன், தேவியின் பராக்கிரமத்தையும் ரூபலாவண்யத்தையும் கருணைத் திறத்தையும் கலியுகத்தில் செய்ய வந்த அற்புதத் திருவிளையாடல்களையும் அழகுபட விளக்கிய வாறு என்க!

ஞாலமெலாம் புகழ்ந்தேத்தும் மணிகண்டன் சீகண்டன்
சாமகண்ட நாத தேவன்
கோலமுறும் மூலனெனக் குண்டலியைக் கருத்திருத்திக்
குண மோங்க வீற்றிருந்தான்
சீலமுறும் பெருஞ்சிங்கன் திருமூல னைக்கண்டு
கிருஷ்ணமாரி பூங்கு றத்தி
ஞாலத்தில் எங்குற்ருள் கண்டீரோ எனவினவ
மூலனவன் நவிலு வானே.

**கருத்து:** எல்லா உலகங்களும் புகழ்ந்து போற்றும் ஐயப்பன், மணிகண்டன், ஸ்ரீ கண்டன், சாமகண்டன் என்ற தத்துவ முறையில் நாத தேவனுகி அழகுபெறும் 'மூலன்' என்ற திருநாமந் தாங்கி குண்டலி சக்தியை உள்முகமாகக் கண்டு குணம் பொருந்த வீற்றிருந்தான். சீலம் பொருந்திய பெருமை மிக்க சிங்கன், அழகிய மூலனைக் கண்டு, கிருஷ்ணமாரியை உபாசிக்கும் அழகிய குறத்தி உலகத்தில் எங்கிருக்கிருள் பார்த்தீரோ என்று கேட்க, மூலன் சொல்லத் தொடங்கினுன் என்றவாறு.

வி-ரை: சிவனையும் மாலையும் ஒன்ருக்கிச் செல்வனை அளித்தமாரி (பிள்ளைத் தமிழ்) என்றபடியானதால் திருமால் சிவன் ஆகிய இரு அம்சமும் பொருந்தியதைக் குறிப்பிட, மணிகண்டன், ஸ்ரீ கண்டன், சாமகண்டன் என்றபடி.

குணமோங்க வீற்றிருத்தல்: அமர்ந்த கோலத்தில் முழங்காலைக் கட்டிய வண்ணம் ஞானவொளியை நோக்கிய வண்ணம் அமர்ந்திருத்தல்.

அரஹர சிவசிவ சம்போ—ஜெயஜெய
ஆதி சிவசக்தி ஹரி கிருஷ்ணமாரி

ஆதியனாதியாய் நின்ருள் —அவள்
அந்தரி வானத்தி பார்ப்பனி யோடு
சோதி ஏகாம்பரி தேவி—சுத்த
துரியத்தில் விளையாடும் கயற்கண்ணி சீலி (அரஹர)

வேத விசாலாட்சி சத்தி—வாலை
வேற்காட்டுக் கருமாரி எழுசக்தியாகி
நாதத் திரிசூலம் நாட்டி—ஞாலம்
நீடூழி வாழ வருள்புரி மாரி (அரஹர)

தேவி கருமாரி சத்தி—ஜெய ஜெய
ஸ்ரீ கிருஷ்ணமாரி சிவசத்திமாரி
பாவிக்கும் அருள்புரி நீலி—பக்தர்
பதம்பணிந்தால் அன்றே வரமருள் சீலி (அரஹர)

ஏழுமலைமீது வாழ்வோன்—உலகம்
ஏத்திப் புகழ்கின்ற மாமாயைத் தேவன்
வாழும் வரமளி மாயன்—வந்தோர்
வினைதீர் சீநிவாசன் கோவிந்த நாதன் (அரஹர)

சங்கொடு சக்கரம் ஏந்தி – சந்ததம்
சற்சனர் தமைக்காக்க கோனேரி வாசன்
மங்களக் கோலமாய் நின்ருன்—மகிமை
மதிவளர் பிறையென வளர்வது காணீர் (அரஹர)

திருப்பாற் கடலைக் கடைந்தார்—அங்கே
தேவரும் அசுரரும் அமுதத்தைக் கண்டார்
உருவளர் மோகினியாகி—உவப்பாய்
உயர்ந்த அமுதத்தை அமரர்க் களித்தார் (அரஹர)

சங்கரன் அருள்பெற்ற பதுமன்—சங்கரன்
தலைமேலே கைவைக்கத் துடித்த அசுரன்
அங்கவன் துடித்தங்கே வீழ அழகாய்
அற்புத ஒய்யார மோகினி யானுன் (அரஹர)

கலிகாலக் கொடுமையைக் கண்டு—உலகில்
கலித்துயர் தீர்த்திடக் கருத்தினில் எண்ணி
நலிதீர்க்கும் மாத்திரைக் கோலும்—நல்ல
நல்வேம்பு இலைக்கொத்து பிரம்புடன் வந்தாள்
(அரஹர)

மாதவன் குறவஞ்சியாகி—வையம்
வாழ உரைக்கின்ற வளம்பெறும் வாக்கு
மாதவர் சித்தரும் கண்டு—மகிழ்வாய்
வாக்குரை நிலைகண்டு ஞானமும் பெறுவார் (அரஹர)

வேங்கட மலைவாழும் வஞ்சி—மயக்கும்
வித்தார நடையுடன் வந்தாளே கொஞ்சி
பாங்குறும் வேற்காட்டுச் சோலை—பாரில்
பெருவினை தீர்த்தருள் புண்ணியச் சோலை (அரஹர)

ஆவலுடன் நாடும் சிங்கா வழியில்
ஆண்மையுறும் நூவன் குளுவனும் காண்பீர்
யாவரும் புரிகின்ற வண்ணம்—அன்னோர்
எளிதாம் வழிநிலை இயம்புவார் கண்டீர் (அரஹர)

வி-ரை : ஸ்ரீ கிருஷ்ண மாரியின் வரலாற்றை மூலன் சிங்கனுக்குக் கூறியவாறு 'அரஹர சிவசிவ சம்போ' என்றது சிவநெறியை வளர்க்க வந்த தேவியின் பெருமையைக் குறிப்பிடத் துவங்கியதால் என்க. ஆதி சிவசக்தி, ஹரிகிருஷ்ணமாரி என்றால் சிவசக்தியாயும் நாரணியாயும் விளங்குகின்ற தேவி என்பது விளங்கக் கூறியவாறு. ஆதியாயும், அனாதியாயும் நின்ற அவள், அந்தரக்கன்னி, ஆகாயக்கன்னி, பிரா மணக்கன்னி, காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, கருமாரி ஆகிய எழு சக்திகளாய் ஒன்றாகக்கூடி திரிசூலத்தை ஊன்றி உலகம் நீடூழிவாழ அருள்புரியும் மாரி. தேவி கருமாரியாகிய சக்தி, உலகம் புகழும் ஸ்ரீ கிருஷ்ணமாரியாயும் சிவசக்தியாயும் விளங்கும் மாரி. பாவிகளுக் கும் அருள் புரியும் நீலி! பக்தர்கள் பாதத்தைப் பணிந்தவுடன் அன்றே வரம் அருளும் தேவி. ஏழுமலையாகிய திருப்பதி மலையில் வாழ்பவன் உலகம் ஏத்திப்புகழும் மஹாமாயத்தேவன்; வாழும் வரமளிக்கும் மாயன்; வந்தவர்களின் வினைதீர்க்கும் சீநிவாசனாகிய கோவிந்தன்.

சங்கு சக்கரத்தைக் கரத்தில் தரித்து, (துஷ்டநிக்ரக சிஷ்டபரி பாலனம் செய்பவன்) அடியார்களைக் காக்க கோனேரிக்கரையில்

வாழ்பவன் ; மங்களக் கோலத்துடன் நின்ருன், அவனது மகிமை சந்திரனின் வளர்பிறை போன்று வளர்வதைக் காண்பீர்.

திருப்பாற் கடலைக் கடைந்த போதும், பத்மாசூரன் சிவனைத் துரத்திய போதும் மோகினியாக வடிவெடுத்தவர் திருமால் ஆதலின் கலிகாலத்தில் குறவஞ்சியாக வடிவெடுத்தார்.

கலிகாலத்தின் கொடுமையைக் கண்டு, உலகத்தில் கலியினுல் ஏற்படும் துயரங்களைத் தீர்ப்பதற்குக் கருத்தில் நினைத்து, நலியைத் தீர்க்கும் நல்ல மாத்திரைக் கோலும் நல்ல வேம்பு இலைக்கொத்தும் பிரம்புடன் வந்தாள்,

மாதவன் — குறவஞ்சியாய் வருதல் — அருள்வாக்கு உரைத்தல் மாதவன் — திருமால் மகாதவத்தையுடையவன் எனினுமாம்.

திருவேங்கடமலை வாழும் வஞ்சி, திருவேற்காட்டுச் சோலையில் வந்து பெருவினைகளைத் தீர்த்து அருள் புரியும் புண்ணியச்சோலை.

அந்த சோலையை ஆவலுடன் விரும்பிச் செல்லும் சிங்கா! செல்லும் வழியில் நூவன், குளுவன் ஆகிய இருவரையம் காண்பீர். அவர்கள் குறவஞ்சி இருக்கின்ற சோலைக்கு வழிகாட்டுவார்கள் என்றபடி.

வேற்காட்டுத் தலம்செல்ல வழிகேட்டு விருப்போடு
மூலனுடன் ஏகுங் காலை
ஆற்றலுறும் மனங்காத்தான் வனங்காத்தான் அகில
புகழ்ந்தேத்த காடு காத்தான் [மெலாம்

ஏற்றமுறும் சிவக்கோலம் எழிலோங்க அக்கமணி
கழுத்திலங்க ஐந்தெ ழுத்தைப்
போற்றுநருக் கறக்கருணை புரிகின்ற பெருங்காத்தன்
நூவனென முன்வந் தானே.

**கருத்து:** திருவேற்காட்டுத் திருத்தலத்திற்குச் செல்லுவதற்கு வழி கேட்டு, மூலனுடன் செல்லும்போது, ஆற்றலால் மனத்தைக் காத்தவனும், வனங்காத்தவனும், உலகமெல்லாம் புகழ்ந்து போற்ற திருவேற்காட்டைக் காத்தவனும் மேன்மை பொருந்திய திருநீற்றின் அழகு நெற்றியில் விளங்கவும் ருத்திராட்சமாலை கழுத்தில் விளங்கவும் 'சிவாய நம' என்ற ஐந்து எழுத்துக்களைப் போற்றுபவர்க்கு அறக்கருணை புரிகின்ற பெருமை பொருந்திய காத்தன் நூவனுக எதிரே வந்தான்.

மனங்காத்தான்: புலனடக்கி ஐம்பூதங்களையும் நிலைநிறுத்தும் பர்வத விமானத்தில் தவக்கோலமாயிருந்த காத்தன்.

வனங்காத்தான்: காட்டில் ஆலமரத்தின் மீதேறி கன்னியர் ளுடன் விளையாடி ஆரிய மங்கையை நாடி வனங்காத்த வீரன்.

காடுகாத்தான்: திருவேற்காட்டு எல்லையில் நின்று தேவி அரு ளாட்சிக்கு துணையாகக் காத்து வருபவன் என்க.

விருத்தம்

சிங்கனுர் நூவன் தன்னை சிறப்புறக் கண்ட போது
அங்கவன் குறிப்ப றிந்து அகிலத்தில் கரிய மாரி
மங்களச் செல்வி மாரி மாமாயி வீர சத்தி
துங்கநற் சத்தி பற்றிச் சூட்சும முரைசெய்வானே

**கருத்து:** சிங்கன் நூவனைக் கண்டான்; சிங்கனின் குறிப்பை அறிந்து, கருமாரியின் சூட்சுமத் திறனை நூவன் சொல்லத் தொடங் கினுன்.

சோதி ஒளிவீசித் திகழும்—ஞான
சுந்தரி தாள்போற்றி சொல்வேன்
வேதம் புகழ்ந்தேத்தும் மாரி—தேவி
வேற்காட் டரசிபுகழ் கேட்பீர்;

ஓங்கார நாதஒலி சூழும்—உயர்
வேதகீத ஓசை வாழும்
ரீங்காரச் சத்தியர் சூழ்வர்—எங்கும்
ரிஷிகள் தினம்போற்றி வாழ்வார்

கயிலைப் பெருமலைக் காட்சி—அதைக்
கண்டு களிப்பதே மாட்சி
அயிலைக் கரமேந்தும் கந்தன்—அண்ணன்
ஆனை முகத்தனும் போற்றும்

ஒருநாள் வைகறைப் போதில்—அனைவரும்
உரத்து அரகரவென் றேத்த
திருமிக்க பேரொளிச் சோதி—தோன்றி
திடுமென மறைந்த தப்போதே.

கல்லென்ற ஓசையைக் கேட்டு—அமரர்
காரணம் என்னெனக் கேட்டார்
அல் நிற மாரியாய் வருவாள்—தேவி
ஐந்தொழில் நீற்றினுல் புரிவாள்

கலியுகம் காண்கின்ற மாட்சி—கருத்தில்
கண்டு களிக்கும் அத்தாட்சி
கலிகோரக் கொடுமையை நீக்க—தேவி
கருமாரி என வருவாளே.

**கருத்து:** சோதி ஒளி வீசிப் பிரகாசிக்கும் ஞான சுந்தரியாம் கருமாரியின் பாதங்களைப் போற்றிச் சொல்லுவேன். வேதங்கள் புகழ்ந்து போற்றும் மாரித் தேவியாம் திருவேற்காட்டு அரசியின் புகழைக் கேட்பீர்!

ஓங்காரத்தின் நாத ஒலி எந்த நேரத்திலும் ஒலித்துக் கொண்டு இருக்கும். உயர்ந்த நான்கு வேதங்கள், கீதங்கள் ஆகியவைகளின் ஒலி என்றும் நிரந்தரமாக இருக்கும். ரீங்காரத் தன்மை மிகுந்த சத்திக் கணங்கள் சூழ்ந்து கொள்வார். எங்கும் ரிஷிகள் தினமும் போற்றி வாழ்வார்.

கயிலாயப் பெருமலையின் காட்சி, அதனைக் கண்டு களிப்பதே பெருமை. வேலைக் கரத்தில் தரித்த வேலனும் அவனுக்கு மூத்தவனுகிய விநாயகனும் எப்போதும் போற்றிக் கொண்டே இருப்பார்கள்.

ஒருநாள் அதிகாலையில் (பிரம்ம முகூர்த்தத்தில்) எல்லோரும் 'அரஹர' என்று போற்றும் நேரத்தில் அழகிய பெருத்த ஒளிவீசும் சோதி தோன்றி சீக்கிரத்தில் அரைக்கணத்தில் மறைந்தது.

'கல்' என்ற ஓசையைக் கேட்டு தேவர்கள் இதன் காரணம் என்னவென்று கேட்டார்கள். கருநிறமாரியாக தேவி வருவாள். திருநீற்றினுல் ஐந்து தொழிலையும் செய்வாள். கலியுகம் காணக் கொடுத்து வைத்த காட்சி. கருத்தில் கண்டு களிப்பதே அத்தாட்சி. கலிபுருஷனுல் உலகிற்கு ஏற்படும் கோரக் கொடுமையை நீக்குவதற்குத் தேவி கருமாரி என வருவாள் என்றபடி.

எழுவராய்ப் பாரினில் வருவாள்—உலகம்
ஏழும் அரசாட்சி புரிவாள்
விழுமிய நிமித்தமும் இதுவே—அனைவரும்
உண்மை உணர்ந்தே தெளிவீர்

என்ற பெருமானின் உரையைக் கேட்டு
எல்லோரும் வியப்பினில் ஆழ்ந்தார்
கன்றுமான் கரந்தரித் தோனை—கருத்தில்
கருதிப் பன்முறை துதித்தார்

இமய மலையரசன் தவத்தால்—கலியில்
எழில்மக வாய்வந்தாள் தேவி
சமய மறிந்தே அருள்புரியும்—நாதன்
தனிக்கோல முடன்வந்து மணந்தான்

மணக்கோலங் கொண்ட நாள்—அன்று
மக்கள் வாழ் பாரத தேசம்
கணத்தினில் தெற்குயர் வாகிக்—காணும்
வடபுலம் தாழ்ந்தது கீழாய்;

இருபுறம்சமன்செய்ய ஏவ—உடனே
இருகரங் கூப்பினர் முனிவர்
திருமணக்கோலநற் காட்சி—காண்பாய்
திருவேற் காட்டினில் என்றார்.

**கருத்து :** தேவி ஏழு சத்திகளாகிப் பூவுலகில் வந்து ஏழு தலங்களில் அமர்ந்து ஏழுலகத்தையும் அரசாட்சி புரிவாள் என்பதற்குச் சிறந்த அறிகுறியாம். எல்லோரும் இதன் உண்மை உணர்ந்து தெளிவீர் என்றபடி.

சிவபெருமானின் உரையைக் கேட்டு அனைவரும் ஆச்சரியக் கடலில் மூழ்கினர். இளமானைக் கரத்தில் தரித்தவனைக் கருத்தில் நினைந்த வண்ணம் பலமுறை துதித்தார்.

பர்வதராஜனின் தவத்தால் — கலியுகத்தில் தாமரை மலரில் குழந்தையாக வந்தாள் தேவி. தக்க காலமறிந்து அருள்புரியும் சிவ பெருமான் கல்யாண சுந்தரனாக வந்து மணம் புரிந்தான்.

பார்வதிக்கும் பரமசிவனுக்கும் திருமணம் நடந்த அந்த நேரத்தில் பாரத தேசத்தின் தெற்கு உயர்ந்து வடநாடு தாழ்ந்தது. தெற்கையும் வடக்கையும் சமப்படுத்தும்படி அகத்தியருக்குக் கட்டளையிட்டார் சிவபெருமான்; அகத்தியர் இருகரங்கூப்பி நான் எப்போது காண்பது என்றார். திருமணக்கோலக் காட்சியைத் திருவேற்காட்டில் காட்டு வேன் என்றார். இதன் விவரம் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணத்தில் காணலாம்.

திருமணக் கோலக் காட்சி
திருவேலங் காட்டில் கண்டு
ஒருமனங் கொண்டு போற்றி
உவந்தனர் பன்னாள் அன்றோ!
அருட்சிவ நாதன் நீற்றால்
ஐந்தொழில் புரிய வந்தாள்
கருமாரித் தேவி கீர்த்தி
கழறவும் என்னு லாமோ.

**கருத்து:** ஸ்ரீ பாலாம்பிகை சமேத வேதபுரிநாதனின் திருமணக் கோலக் காட்சியை (திருவேலங்காடு) திருவேற்காட்டினில் கண்ட அகத்தியர் ஒருமை மனத்தராகி மகிழ்ச்சியடைந்து பலநாள் போற்றினர் அல்லவா? அத்தகைய அருட்சிவநாதனின் திருமேனியில் மலர்ந்த திருநீற்றினால் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்ற ஐந்து தொழிலையும் செய்ய வந்த கருமாரித் தேவியின் பெருமையைச் சொல்லுதற்கும் சுலபமாகுமோ?

வி-ரை: நாதன் நீற்றால் ஐந்தொழில் புரிய வந்த விவரம் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணத்தில் காண்க.

கருமாரித் தேவி கீர்த்தி கழறவும் என்னுலாமோ"; வாக்குக்கும் மனத்துக்கும் அதீதமான பொருளை சொல்லாலும் பொருளாலும் சுட்டி உரைக்கவொண்ணாமை பற்றி சொல்லவும் என்னுலாகுமோ" என்றபடி.

கருநாக வடிவங் கொண்டு
காத்தனள் பல்லு கங்கள்
அருட்சோதி வடிவாய் நின்று
அளித்தனள் பல்லு கங்கள்
திருவிளக் கமரும் தேவி
செயுமரு ளாடல் எல்லாம்
ஒருவரால் அறிய வொண்ணா
துரைக்கவும் ஒண்ணா தன்றோ.

**கருத்து:** கருநாக ரூபங்கொண்டு புற்றில் அமர்ந்து பல யுகாந்த காலங்கள் அண்டசராசரங்களையும் காத்தவள், அருட்சோதி வடிவாய் நின்று பல யுகங்கள் காத்தாள்; திருவிளக்கில் அமர்ந்து தேவி செய்கின்ற அருள் திருவிளையாடல்களை எல்லாம் ஒருவரால் அறியவொண்ணாது. உரைக்கவும் முடியாதல்லவா!

வி-ரை : கருநாக வடிவங்கொண்டும், அறிய முடியாத அனற்பிழம் பொளியாய் நின்றும் அருள்புரிந்த தேவி எல்லோரும் உய்யும் வகையில் திருவிளக்கில் அமர்ந்து அன்பர்கள் சித்தத்தில் நின்று உணர்த்தி அவள் புரியும் திருவிளையாடல்களை யாரால் அறிய முடியும். சொல்ல முடியும். முடியாது என்றவாறு.

வேங்கட நாதன் தங்கை
வேற்காட்டில் வாழும் சீலி
ரீங்கார நாத சத்தி
எழுவரில் இளைய சூலி
ஓங்கார ஓசை கேட்டு
உளமகிழ் கிருஷ்ண மாரி
பாங்காரும் பதம்ப ணிந்தோர்
பரவசம் எய்து வாரே.

**கருத்து:** திருவேங்கட மலையில் வாழும் சீநிவாசப் பெருமானின் தங்கையாய்த் திருவேற்காட்டில் திருக்கோயில் கொண்டு வாழ்பவள். ரீங்கார மத்தியில் நாதசீலசத்தியாய் விளங்கி, எழுசத்தியரிலும் இளையவளாய்ச் சூலத்தைக் கரத்தில் ஏந்தியவள். பிரணவத்தின் ஓசையை கேட்டுப் பெருத்த மகிழ்ச்சி கொள்ளும் கிருஷ்ணமாரியின் பாங்குற விளங்கும் பாதங்களைப் பணிந்தோர் பக்திப் பரவசத்தை அடைவார் என்றவாறு.

திருவேங்கடநாதன், தன் தங்கை அருளாட்சி புரியும் திருக்கோயில் ஈசான பாரிசத்தில் எழுந்தருளி இருப்பதும், நவக்கிரகங்களை இருநோக்கினுல் காண்பதும் தங்கைக்காக என்பதை இன்றும் திருவேற்காட்டுத் திருக்கோயிலில் காணலாம்.

வி-ரை : "சீநிவாசன், கருமாரி, அண்ணன், தங்கை எவ்விதம் என்ற விவரத்தைத் திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணத்தில் காண்க.

கருமாரித் தேவி நாமங்
கருத்தினில் கருத வல்லோர்
இருவினை மயக்கொ ழிந்து
இன்பமும் எய்து வாரே
திருமிகு மாரித் தாளை
சிந்தைவைத் தேத்து வோர்கள்
அருட்குற முணர்ந்து நாளும்
அருள்நெறி வளர்ப்பார் நன்றே.

கருத்து : கருமாரித் தேவியின் திருநாமத்தைக் கருத்தில் (முறைப் படி காலமறிந்து) கருதும் திறமை படைத்தவர்கள் இருவினைகளால் ஏற்படும் மயக்கத்தினின்று விடுதலை பெற்று இன்பமடைவார்கள். மேன்மை மிகுந்த கருமாரியின் திருப்பாத கமலங்களைச் சிந்தையில் அன்புடன் போற்றுவோர்கள், அருட்குறத்தின் தன்மையை உணர்ந்து எப்போதும் அருள் நெறியை நன்முறையில் வளர்ப்பார் கள்.

வி-ரை : 'கருத்தினில் கருதவல்லார்' என்றதால் திரிகரண சுத்தி யுடன் ஐம்புலன் ஒன்றிய வகையில் தியானித்தல் என்றபடி.

சிந்தைவைத்தேத்துவோர் உள்ளும் புறமும் கண்டு மகிழவல்ல உத்தமர் என்றபடி.

'அருட்குறம் உணர்ந்து ஸ்ரீ தேவியே மனிதர், அமரர், முனிவர் நாவில் நின்று தன்னை நாடிவரும் அன்பர்களின் குறையை உணர்த்தி அக்குறை நீங்க உபாய முணர்த்தி, அக்குறையை நீக்கி நல்வாழ்வில் ஈடுபடுத்தும் வாக்கிற்கு அருட்குறவாக்கு என்க.

திரிகரண சுத்தியோடு தொழுவருகும் தெய்வம்
திருவேற்கா டெல்லையினில் திகழுகின்ற தெய்வம்
பரிபூரண கருநாகன் படமெடுக்கும் தெய்வம்
பம்பைமணி சிலம்புடுக்கை பாடல்புரி தெய்வம்
சரியை கிரியா யோக சமயசித்து தெய்வம்
சந்தான பலன் அளிக்கும் சாம்பலணி தெய்வம்
குறியறிந்து குறமுரைக்கும் குவலயத்து தெய்வம்
குணரசித கருமாரி கோமளமே தெய்வம்

என்றார் பாலராஜ பாஸ்கரனார். "குறியறிந்து குறமுரைக்கும் குவலயத்து தெய்வம்" என்பதற்கு ஏற்ப ஈண்டு அருட்குறம் என்றபடி.

மாதவன் வஞ்சி யாகி
　　மெய்க்குறம் உரைக்க வந்தான்
மாதவர் மாத வத்தால்
　　மாயையி னின்றும் நீங்கி
போதமும் அருளும் பெற்று
　　பொருந்தினர் இன்ப வெள்ளம்
வேதனை தீர்க்கும் மாரி
　　வேற்காட்டுத் தேவி என்றே.

**கருத்து :** மாதவனே குறவஞ்சியாகி உலகத்தில் நின்று நிலைக்கும் உண்மைக் குறத்தை உரைக்க வந்தார். தவச்சிரேஷ்டர்கள், தங்கள் பெரிய தபோபலத் தன்மையால் மாயையிலிருத்து நீங்கி ஞானமும் அருளும் கைவரப் பெற்றோராய் இன்ப சாகரத்தில் அழுந்தினர். வேதனைகளைத் தீர்க்கும் மாரி திருவேற்காட்டில் வாழும் கருமாரித் தேவி என்று உண்மைதெளிந்தனர் என்றவாறு.

வி-ரை : 'மாதவர் மாதவத்தால் மாயையினின்றும் நீங்கி' தேவியின் அருட்குறம் மகரிஷிகளின் மாயையையும் எளிதில் நீக்க வல்லது.

மாமாயனே குறவஞ்சியாய் வந்ததால், மாயையால் வருந்துன்பங்கள் எளிதில் நீங்கப் பெற்றது என்க.

'வேதனை தீர்க்கும் மாரி வேற்காட்டுத் தேவி'

திருவேற்காட்டில் எழுந்தருளியுள்ள தேவி கருமாரி மக்களின் வேதனைகளைத் தீர்த்து சாதனை புரிவதற்கு என்றே வந்தவள் என்பது பெறப்படும்.

மெய்க்குறம் : இருவினைப் பயன்களை எடுத்துரைத்து இடர்நீங்க மார்க்கமுரைத்து, ஈடேற்றிப் பயன்பெறச் செய்தல் என்றவாறு, எனவே அருட்குறம் இன்னதென்று அகில உலகம் அறிந்துணர்வதற்கு மாதவனே குறக்கூடை எடுத்து குறவஞ்சியாக வந்தான் என்பது பெறப்படுகின்றது.

தான் இன்னார் என்று பிறருக்குணர்த்தும் பொருட்டு கோவிந்தா கோவிந்தா கோவிந்தா என்று கூறி வருதலால் மாதவனே என்பதும் உறுதிப்படுகின்றது.

## நொண்டிச் சிந்து

வேத வன மாட்சி—உலகில்
வேறெங்கும் இதற்கிணை உண்டோ சொல்வீர்
வேதனும் வியப்புறுவான்—அன்னையை
விரைமலர் தூவிப் புகழ்ந்திடுவான் (வேத)

மாம்பொழில் சூழ்காடு—மயில்கள்
மகிழ்ந்து நடம்புரிப் பெருங்காடு
சாம்பர் தீர்த்தமுறும்—இங்கே
சாதனை பலவுண்டு அறிகுவிரே (வேத)

கும்பக் கொடி யேந்துங்—குண்டலி
கோதை வாலையவள் பெருஞ்சத்தி
நிம்பத் தளிருடனே—பிரம்பை
நற்கர மேந்திமகிழ் கொண்டவளாம் (வேத)

பாலி நதிக் கரையில்—தேவி
பற்பல விளையாடல் புரிபவளாம்
நீலி கருமாரி—நாதம்
நிலத்தெழும் ஓசையில் மகிழ்பவளாம் (வேத)

கண்ண னுடன் பிறந்தாள்—கலியில்
கருமாரி கிருஷ்ணமாரி எனவந்தாள்
வண்ணச் சந்தத்தில்—வாலை
வரமளிக் குண்டலி யென நிற்பாள் (வேத)

முக்கண்ணி தேவியவள்—அவளை
முழுதும் அறிந்தவர் யாருமில்லை
சொக்க நாயகியாள்—நம்பினோர்
துயரத்தைத் தீர்த்தருள் திருமாரி (வேத)

அருட்குற முரைப்போரின் உள்ளத்தில்
அறிவொளியாகி நிற்பவளாம்
திருநீற்று நெறிவளர்க்க—உலகில்
சிவசத்தியாகிய தெய்வ மவளாம் (வேத)

தென்னை வாழை மாமரங்கள்—சிறப்பாய்ச்
செழித்திடும் வேற்காட்டுச் சோலையினில்
பன்னக வடிவாகி—அற்புதம்
பற்பல சித்து புரிபவளாம் (வேத)

செந்நெல் வயல் சூழும்—வேற்காட்டில்
திரிசூலம் ஊன்றிச் சிறப்பளித்தாள்
என்னே அவள் பெருமை—இன்னும்
இயம்புவேன் திரிசூல மாட்சிதனை (வேத)

புற்றின் குணதிசையில்—அன்று
புகழ்பெற ஊன்றிய திரிசூலம்
நற்றவ முனிவர்கட்கு—நாளும்
நாத உணர்வருளுந் திரிசூலம் (வேத)

கண்டால் பிணிநீங்கும்—கருத்தில்
கருதினோர் வினையெலாந் தவிடுபொடி
எண்டிசைப் பாலகரும்—என்றும்
ஏத்திப் பணிந்திடும் எழிற்சூலம் (வேத)

திரிசூலங் காட்சி காணின்—அன்பர்
தீராத வினைதீரும் அருளோங்குந்
திரிசத்தி யாய் நின்று—தேவி
தினமும் புரிதொழிலை யாரறிவார்.

**கருத்து:** உத்தர வேதாரண்யம் என்று உரைக்கப்படும் திருவேற்காட்டின் பெருமையே பெருமை; உலகத்தில் அதற்கு இணையான தலம் எங்கிருக்கிறது சொல்வீர் என்றபடி.

உலகத்தைப் படைத்த பிரமனும் ஆச்சரியப்படுவான்; நாளும் அங்கே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தேவி கருமாரி அம்மனை சிறந்த புஷ்பங்களைத் தூவி புகழ்ந்து அர்ச்சிப்பான்.

மாஞ்சோலைகள் சூழ்ந்து விளங்கும் திருவேற்காடு, மயில்கள் ஆனந்தத்தால் நடம் புரியும் காடு. திருச்சாம்பர் தீர்த்தம் பொருந்தி விளங்கும் அந்தத்தலம் பற்பல சாதனைகளைச் சாதிக்கும் தலம் என்பதை உணர்வீர்.

கும்பக் கொடியைக் கரத்தில் ஏந்தி மகிழுங் குண்டலியாய், வாலையாய் விளங்கும் சத்தி— வேம்பிலைக் கொத்துடன் பிரம்பை கரத்தில் ஏந்தி மகிழ்ச்சி கொண்டவளாம்.

பாலியாற்றங்கரை ஓரத்தில் தேவி கருமாரி பலவேறு திருவிளையாடலைப் புரிபவள். நீலியாய், கருமாரியாய் விளங்கும், நாதம் நிலைத்து எழுச்சி பெறும் சப்தத்தில் மகிழ்பவள்.

கிருஷ்ண சகோதரியாகிய இவள் கலியுகத்தில் கருமாரி கிருஷ்ணமாரி என்று வந்தாள். வண்ணச்சந்தப் பாக்களில் மகிழ்ச்சி கொண்டு வரமளிக்கும் குண்டலியாயிருப்பாள்.

சோம, சூர்ய அக்கினி என்ற மூன்று கண்களைப் பெற்று விளங்கும் ஜகன்மாதாவைப் பூரணமாக அறிந்தவர்கள் யாரும் இல்லை. அழகின் தலைவியாய் விளங்குபவள். தன்னை நம்பும் அடியார்களின் துயரத்தை தீர்த்து அருள் புரியும் கருமாரி.

தெய்வ உபாசனையால் அருட்குறம் உரைப்பவரின் மனத்தில் அறிவாகி, ஒளியாகி நிற்கும் பராசக்தி. திருநீற்று மார்க்கத்தை என்றும் நிலைபெற வளர்ப்பதற்கு சிவசத்தியாகி விளங்கும் தெய்வம்.

தென்னை மரங்களும், வாழைமரங்களும் மாமரங்களும் நெருங்கிச் செழிக்கும் திருவேற்காட்டுப் பூஞ்சோலையில் கருநாக ரூபங் கொண்டு பற்பல அற்புதச் சித்துக்களைப் புரிபவள்.

செந்நெல் விளைச்சல் செழிக்கும் வயல்வெளிகள் நிறைந்த திருவேற்காட்டுத் திருத்தலத்தில் திரிசூலத்தை ஊன்றித் தலத்திற்குச் சிறப்பளித்தாள். அவள் பெருமையை என்னெனச் சொல்வது ? இன்னும் அந்தத் திரிசூலத்தின் பெருமையைச் சொல்லுவேன்.

புற்றுக்குக் கிழக்கில் பூர்வகாலத்தில் அந்தரி, வானத்தி, பார்ப்பனி, காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, கருமாரி ஆகிய ஏழுசத்திகளாகி ஊன்றிய திரிசூலம் நல்லதவ மகிமையில் சிறந்து விளங்கும் மகரிஷிகள் போற்றித் துதிக்கவும் நாத உணர்வை அளிக்கும் திரிசூலம்.

அந்த திரிசூலத்தைக் கண்களால் கண்ட மாத்திரத்தில் பிறவிப் பிணி நீங்கும். கருத்தில் அதனை நினைந்து துதிப்போரின் வினையெல்லாந் தவிடுபொடியாய்விடும். எட்டுதிக்குப் பாலகரும் எப்போதும் ஏத்திப் பணியும் அழகிய சூலம். திரிசூலக் காட்சியைக் கண்டால் அன்பர்களின் தீராத வினைகள் யாவும் தீர்ந்து அருள் ஓங்கும் மூன்று சத்தியாய் விளங்கும் தேவி நாடோறும் புரியும்காரியங்களை யார் அறிவார்கள் என்றபடி

வி-ரை : திருவேற்காட்டு அழகைக் கண்டு பிரமனும் ஆச்சரியமடைவான் எனவே 'வேதனும் வியப்புறுவான்'', என்றபடி.

''சாம்பர்த் தீர்த்தமுறும் இங்கே சாதனை பலவுண்டு'

பாலசுப்ரமண்யர் அமைத்த திருச்சாம்பர்ப் பொய்கை சகல சாதனைகளுக்கும் காரணமாய் விளங்குவது. தேவியின் திருநீற்று மாட்சியைச் சிறப்பித்தவாறு. விவரம் ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணத்தில் காண்க.

இவ்வண்ணங் கருமாரித் தாய்
எழிலருள் விளையாட்டெல்லாம்
உய்வண்ணம் உரைத்த காலை
உவகையாய்க் கேட்ட சிங்கன்

மைவண்ண விழியாள் மேனி
நல்லியல் நவில்க வென்ருன்
அவ்வண்ணம் என்ன வென்று
அறைந்தனன் குளுவன் ருனே.

**கருத்து:** கருமாரித்தேவியின் அருள் விளையாடலை குளுவன்சொல்லவும் மகிழ்ச்சி பொருந்தச் சிங்கன் கேட்டு நீ கண்ட குறவஞ்சியின் நல்லிலக்கணத்தைச் சொல்லுக என்ன குளுவனும் சொல்லலானுள்.

உள்ளத்தால் உயர்ந்த சீலன்
உத்தமன் விவேக நூலன்
கள்ளமில் லாம னத்தால்
கள்ளரின் குறையைத் தீர்த்தோன்
வெள்ளையாள் பொம்மி சூழ
வீரமாய்ப் பரியில் சென்ருேன்
கள்ளமில் குளுவ ஞகிக்
களிப்புடன் உரைக்க லுற்ருன்.

**கருத்து:** உள்ளத்தால் உயர்ந்த சீலனுய், உத்தமனுய் விவேக நூலறிவோனுய் குற்றமில்லாத மனத்தினுல் கள்ளர்களின் குறையைத் தீர்த்தவன், வெள்ளையும் பொம்மியும் சூழ வீரத்துடன் குதிரையில் அமர்ந்து செல்வோன், குற்றமில்லாத குளுவனுகிச் சந்தோஷத்துடன் செல்லலானுன்.

### குளுவன் குறவஞ்சி பற்றிய விவரங் கூறுதல்

திருமலை வாழ்குறத்தி—சிங்காரத்
திருமுகம் கொண்ட நிலைப்பூங் குறத்தி
அருட்குற முரை குறத்தி—அழகாய்
அன்னநடை நடக்கும் மென்குறத்தி

கருமேக மெனத்திரண்டு—சுருண்ட
கற்றைக் குழலுடைய கணிச்சியவள்
திருமலர் எனமலர்ந்த—திருமுகத்
திருநுதல் சிந்துரத் திலகத்தாள் (திருமலை)



9B
2-40

முல்லை நிகர் வெண் நகையாள் — முனிவரும்
மயங்கப் புன்னகை புரிபவளாம்
சொல்லில் இனியவளாம்—சொல்லால்
சொகுசாக எல்லோரும் மயங்கிடுவார் (திருமலை)

கோவிந்தா என்றுரைப்பாள்—எப்போதும்
குதுகலத்துடன் அருள் மொழிபவளாம்
கோவிந்தன் நாமமதைப்—பலரும்
கூறக் கேட்டு உள்ளம் மகிழ்ந்திடுவாள் (திருமலை)

வேம்பிலைப் பிரம்பேந்தி — அருளால்
வினை நீங்க முறையுரை வித்தகியாள்
சாம்பர் தருபவளாம் சிலம்பொலி—சத்தியத்
தண்டைச் சிலம்பொலி பதத்தவளாம் (திருமலை)

**கருத்து :** திருமலையாகிய திருவேங்கடமலையில் வாழுங் குறத்தி தேஜஸ் மிகுந்த முகம் கொண்டு நிலைத்த அழகு கொண்ட குறத்தி—அருட்குறத்தை உரைக்கும் குறத்தி—அழகாக அன்னம்போல நடை நடக்கும் மென்குறத்தி.

கருமேகம் போலத் திரட்சி பெற்று, சுருண்ட கற்றைக் கூந்தலு டையவள்; காலத்தைக் கணித்து உரைப்பவள் திருமகள் வாழும் தாமரை மலர் போன்று மலர்ச்சி பெற்ற அழகிய முகமும் அதற்கேற்ற நெற்றியும் அதில் சிந்துரமும் திலகமும் பெற்றவள்.

முல்லையையொத்த வெண்பற்கள் உடையவள் ; முனிவர்களும் மயங்கும்படி புன்னகை புரிபவள். சொல்லினால் இனிமையாகப் பேசு பவள், சொகுசாகப் பேசின் எல்லோரும் மயங்கிடுவார்.

எப்போதும் கோவிந்தா என்று சொல்லுவாள்; குதூகலத்துடன் எல்லோருக்கும் அருளைப் பொழிபவள். கோவிந்தன் திருநாமத்தைக் எல்லோரும் சொல்லக் கேட்டு, உள்ளம் மகிழ்ச்சியடைவாள்.

வேம்பிலையும் பிரம்பும் ஏந்திக் கொண்டு அருளினால் வினை நீங்கும் முறையைச் சொல்லும் வித்தகியாள் ; எல்லோருக்கும் திருச் சாம்பர் தருபவள் ; சத்தியத் தண்டைச் சிலம்புகள் ஒலிக்கும் பாதத்தவள்.

வஞ்சியின் வனப்பைக் கேட்டு
உள்ளத்தில் உணர்வு கொண்டு
செஞ்சொலைச் செப்பும் மாதைத்
திறமுறக் காண்பேன் என்றும்
கொஞ்சிடும் குரலால் பேசும்
வஞ்சியைக் காண்பேன் என்றும்
நெஞ்சினில் நினைவு கொண்டு
நேரிழை எங்கே என்றான்

**கருத்து :** குளுவன் குறவஞ்சியின் வர்ணனை கூறக் கேட்ட சிங்கன் குறத்தியை விரைவில் காணவேண்டும் என்று·உணர்வு கொண்டான்· செம்மையான சொல்லைச் சொல்லும் அந்தக் குறத்தியைத் திறம் பொருந்தக் காண்பேன் என்றும், கொஞ்சும் குரலால் பேசும் குற வஞ்சியைக் காண்பேன் என்றும் நெஞ்சில் நினைவு கொண்டு எங் குள்ளாள் குறத்தி என்றான்.

## எல்லோரும் திருவேற்காடு வந்தடைதல்

வேற்காட்டுச் சோலை வாழும்
வனிதையள் ; வாக்கு ரைக்கும்
மாற்காட்டு மாலாம் வஞ்சி
மாதினைக் காண்போம் என்று
ஆற்றலால் சிறந்த மூலன்
நூவனும் குளுவ னோடு
போற்றுதற் கரிய சிங்கன்
பொழிலிடைப் புக்கான் அன்றே.

பொழிலிடைப் புகுந்த சிங்கன்
பொன்னெழில் வதனங் கண்ட
எழிலுறும் சிங்கி கண்டு
எண்ணாத எண்ணம் எண்ணி
விழியினால் நோக்கி நின்றான்
வீரமாச் சிங்கன் கண்டு
வழியெலாம் வந்த சேதி
விளம்புவாய் என்று ரைத்தான்.

வேங்கடமா மலையி னின்று
வேற்காட்டுச் சோலை வந்து
பாங்குறும் குறம்ப கர்ந்து
பெருஞ்சேதி தனையு ரைத்தார்
தீங்கிலா வகையில் எண்ணேழ்
தேயமும் சென்று வெற்றி
ஈங்கியான் பெற்ற தாகும்
என்றுரை செய்தாள் வஞ்சி

### சிங்கன் சிங்கி வாதம்

எண்ணேழு தேயமும் சென்றதோர் சிங்கியே
என்ன பரிசிலைப் பெற்று வந்தாய் ?
எண்ணங்கள் ஈடேற வாக்குரைத்து வந்தேன்
என்ன பெற வேண்டும் சிங்கா ?

அருட்குற முரைத்து அரும்பெரும் பரிசை
அடையாது வந்ததேன் சிங்கி ?
அருள்பெற்று அவனியில் வாக்குரைக்குங் காலை
அதற்குப் பரிசிலோ சிங்கா ?

அருளாலே வருவது அவளாலே யன்றியோர்
அணுவும் அசையுமோ சிங்கா ?
அருளாலே உலகம் நடந்தாலும் மக்கள்
அன்பு பெருததேன் சிங்கி

அன்புரையாலென்னை எண்ணேழு தேயமும்
இன்போடு வாழ்த்தினர் சிங்கா
அன்பிருந்தாலவர் அளித்த காணிக்கையை
அன்போடு காட்டுவாய் சிங்கி

பற்பல மக்களின் வினைதீரப் பாரினில்
பெருங்குறம் உரைத்தேனே சிங்கா
அற்புதம் புரிந்தாலும் அதற்கான பரிசிலை
அடையாத தென்னவோ சிங்கி ?

குறக்கூடை ஏந்திக் குறமுரைத் தேபின்னும்
கூழுக்குக் குறமொன்ரு சிங்கா
அறமோங்கு உலகத்தில் குறமுரைத்துக் கூழை
அடைந்தது என்னேடி சிங்கி

கூழின் மகிமையை அறிந்தால் நீ இவ்வண்ணம்
குறை கூறுவாயோ நீ சிங்கா
கூழின் பெருமையைக் குவலயம் அறிந்திட
குணமுறப் புகல்வாயே சிங்கி

காலமும் நேரமும் கருத்தும் ஒன்ருனல்
கூழின் சிறப்பல்லோ சிங்கா !
காலமும் நேரமும் கருத்தும் ஒன்றவே
கருத்தறிந் துரைப்பாயே சிங்கி !

அன்புடன் ஆர்வமும் பக்தியும் நேசமும்
இணைந்ததால் வருவதே சிங்கா
அன்பான குணங்கள் ஆருயிர் யாவும்
அடையாத தேனடீ சிங்கி

அன்னையென்றே தினம் அடிபணி அன்பர்க்கு
அன்புளம் வருமே சிங்கா
முன்வினைப் பயனல் தீவினை மூண்டிடின்
என்ன செய்வானடீ சிங்கி

வினைதீர்க்க வாக்கும் வாழ்வுக்கு நீறும்
விரைந்து அளிப்பேனே சிங்கா
எனையாரென் றுணர்ந்து அருள்வாக் குரைத்திடில்
என்னெஞ்சம் மகிழுமே சிங்கி

கயிலாய மலைவாழ் கண்ணுதற் பெருமானே
கனவீரனுய் வந்த சிங்கா
ஒயிலாக வஞ்சியாய் உருவெடுத்தே வந்த
மாதவ கோவிந்த சிங்கி

வேங்கட மலைவந்து விளையாடிக் குறம்கூறும்
வேற்காடு வந்ததேன் சிங்கி
மாங்குயில் சூழ்சோலை வேற்காட்டில் கருமாரி
மெய்யரு ளாட்சியே சிங்கா

கருமாரி கலிமாரி கலியுக மாரியாள்
கிருஷ்ண மாரியென்ன சிங்கி
கருவழி சேராது காத்தருள் புரிந்து
கருணை புரிமாரி சிங்கா

மாலாகி நீயும் சிவனுகி நானும்
சோலையில் வந்ததேன் சிங்கி
மாலோனும் சிவனும் ஒன்றென்று மக்கள்
மனத்தில் உணர்த்தவே சிங்கா

சிவனுக்கும் மாலுக்கும் மேலான தேவி
ஸ்ரீ கிருஷ்ண மாரியே சிங்கி
நவசத்தி வேற்காட்டுத் தேவியின்
நற்பாதம் போற்றுவோம் சிங்கா

**சிங்கன், சிங்கி, மூலன், நூவன் குளுவன்**
**அனைவரும் புற்றின் அருகுற்றுப் போற்றுதல்**

தேவர்கட் கரிய தேவி திருநீற்றுச் செல்வி மாரி
ஆவலாய்ப் போற்று வோர்க்கு அருள்நிலை
[யளிக்கும் தேவி
சேவலங் கொடியோர்க் கன்று திருநீற்றை அளித்த சத்தி
நாவலந் தீவில் வந்த நாரணி போற்றி போற்றி

திரிசூல மேந்தும் மாரி திரிசத்தி ஞான தேவி
எரிவிழி நோக்கா லன்று திரிபுர மெரித்த மாரி
கரிமுதல் நவக்கோள் போற்றும் கருநிற மாரி போற்றி
விரிசடைச் செல்வி யன்னுய் வேற்காட்டு அரசி போற்றி

ஐவரை ஈன்ற மாரி ஆதியே சோதி போற்றி
ஐஞ்சத்தி யாகி நின்று அருளர சாட்சி செய்யும்
ஐந்தெழுத் துடைய மாரி ஆரணி போற்றி போற்றி
ஐங்கரன் அபிடே கத்தை அன்புட னுவந்தாய் போற்றி

கலிதீர்க்க வந்த மாரி நகரத்தில் வாழும் சத்தி
கலியாண கோலங் கொண்டு காட்டினுய் பழைய கோலம்
கலியினுல் வந்த துன்பங் களைந்தருள் மாரி போற்றி
வலிமையை யளித்தெங் கட்கு வரம்தந்த மாரி போற்றி

மாரியுன் பெருமை தன்னை மகிதலத் தறிந்தார் யாரே
காரியங் கடந்த தேவி காரண முதற்று யாகி
சீரிய திருவேற் காட்டில் சிறப்புடன் செங்கோல் ஓச்சும்
நேரிய நிமலி தேவி நாரணி திருத்தாள் போற்றி

கருநாக ரூபங் கொண்டு கருணையைப் புரிந்த மாரி
பெருநாகந் தலைய ணிந்த பெருந்தேவி பூத மாரி
அருந்தவச் சிரேட்டர் போற்றும் ஆதியாம் ஞான மாரி
ஒருமையாம் மனமுற் றோர்க்கு ஒளியளி கான மாரி

வாக்குரை தவறு மாந்தர் வாக்கினில் வாழ்வோய் போற்றி
ஊக்கமும் உணர்வ ளித்து உலகெலாம் வாழச் செய்யும்
காக்குமோர் பொருளே போற்றி காரணி போற்றி போற்றி
சூக்குமச் செல்வி போற்றி சுந்தரி போற்றி போற்றி

## மங்களம்

பல்லவி :

ஸ்ரீ கிருஷ்ணமாரிக்கு ஜய மங்களம் — ஆதி
சிவசக்தி மாரிக்கு சுபமங்களம்

அநுபல்லவி :

ஸ்ரீவித்யா மந்திரமாய் விளையாடும் சீலிக்கு
ஸ்ரீதரனுடன் பிறந்த தேவி கருமாரிக்கு (ஸ்ரீ)

சரணங்கள் :

வினை தீர்க்க வந்த மகமாயிக்கு மங்களம்
வெண்ணீற்றால் வரம்தரும் வாலைக்கு மங்களம்
கனைத்தெழும் குண்டலிக்குக் காளிக்கு மங்களம்
கருநாகக் காட்சிதரும் மாரிக்கு மங்களம் (ஸ்ரீ)

அந்தரக் கன்னியர்க்கும் ஆகாயக் கன்னியர்க்கும்
அந்தணக் கன்னியராய் வந்தவட்கு மங்களம்
மந்திரக் காமாட்சி மாமதுரை மீனாட்சி
தந்திர விசாலாட்சி சத்தியாய் வந்தவட்கு (ஸ்ரீ)

வேதபுரி நாதனுக்கு வேற்கண்ணிக்கு மங்களம்
வலம்புரி விநாயகர்க்கு வேலவனுக்கு மங்களம்
வேதநெறித் தமிழ்வளர்த்த அகத்தியர்க்கு மங்களம்
வாக்களித்த குறத்திக்கும் வல்லிக்கும் மங்களம் (ஸ்ரீ)

திருமலை வாழ்சீநி வாஸனுக்கு மங்களம்
திருவேற்காட் டாட்சிபுரி தேவிக்கு மங்களம்
ஒருமையாய்க் கேட்டோர்க்கும் கற்றோர்க்கும் மங்களம்
உரைத்தோர்க்கும் நடித்தோர்க்கும் இசைத்தோர்க்கும்
மங்களம் (ஸ்ரீ)

திருநீற்று அருளரசி செங்கோலுக்கு மங்களம்
திரிசூல சத்தியர்க்கு சிவயோக மங்களம்
அருள்புரி குருராம தாசருக்கு மங்களம்
அருட்கவி கருமாரி தாசருக்கு மங்களம் (ஸ்ரீ)

## வாழ்த்து

வேதத்தின் மெய்ப்பொருளை வேதாந்த நாயகனை
நாதத்தின் முழுமுதலை நாவார வாழ்த்துவனே

சீதமதி சூடிமகிழ் சிவக்கோலக் கண்ணுதலை
போதமனத் தாற்போற்றி பொன்னடியை வாழ்த்துவனே

திரிபுரத்தை எரித்தானை திருநீறு தரித்தானை
விரிசடை விரித்தானை விடையானை வாழ்த்துவனே

கலியாண கோலத்துடன் காட்சி தந்த பெருமானை
சலியாத உளங்கொண்டு தண்டமிழால் வாழ்த்துவனே.

கொன்றை மலரணிந்து குதுகலித்து அமர்ந்தானை
கன்றுமான் தரித்தானைக் கருத்துணர்ந்து வாழ்த்துவனே.

ஆரணங்கள் அறியாத அனற்பிழம்பாய் நின்றானை
நாரணனும் ஆரணனும் அறியானை வாழ்த்துவனே.

திங்களை யணிந்தானைக் கங்கையைச் சிரமேந்திக்
மங்களக் குணத்தானின் மலரடியை வாழ்த்துவனே.

பக்குவர்க்கு வரமருளும் பரம்பொருளைப் பரசிவனை
ஏக்கணமும் இன்போடு இன்றமிழால் வாழ்த்துவனே.

அன்புக்கு அகமுருகும் ஆனந்த மெய்ப்போத
இன்பம் அளிப்பவனை எப்போதும் வாழ்த்துவனே

சித்திரை முழுமதியில் சீர்பாலி நதியினிலே
வித்தாரத் திருவூறல் புரிபவனை வாழ்த்துவனே

மூர்க்கர்க்கு அருளளித்த முழுமுதலை வேதபுரி
மூர்த்தத்தை மனதார முப்போதும் வாழ்த்துவனே.

புன்சிரிப்பும் கொவ்வைச் செவ்வாயும் பெற்றவனை
இன்னமுதாய்க் காட்சிதரும் எந்தையை வாழ்த்துவனே

விடையேறிப் பெரும்பவனி வேற்காட்டில் வந்தோனை
புடைசூழத் தேவரெலாம் புகழ்பவனை வாழ்த்துவனே

வேற்கண்ணி இடமமர வேதபுரி யெனவந்த
வேற்காட்டு சிவநாதன் தனைப்போற்றி வாழ்த்துவனே

பாலாம்பிகை யோடு கலியாணக் காட்சிதரும்
சீலனும் வேதபுரி சிவன்பாதம் வாழ்த்துவனே.

## வாழி

சீர்பூத்த நான்மறையும் செந்தமிழும் ஆகமமும்
நாளும் செழித்து வாழி [உபநிடமும்
பேர்பூத்த வலம்புரியும் இளமுருகும் காத்தனுடன்
பெருந்தகையும் வாழி வாழி [வீரமுத்துப்

நேர்பூத்த திரிசூலம் நாட்டியருள் எழுசத்தி,
நீடூழி வாழி வாழி [செங்கோலும்
ஏர்பூத்த தமிழளித்த குருராம தாசர்புகழ் எஞ்ஞான்றும்
இலங்கி வாழி.

சுபம்

---

# பாடல் முதற் குறிப்பு அகர — வரிசை

# இதர வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் புராணம் (இரண்டு பாகம்) காலிகோ பைண்ட் | ... | 35 | 00 |
| திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் பிள்ளைத்தமிழ் | ... | 2 | 50 |
| திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் சதகம் | ... | 2 | 50 |
| தோத்திரத் திரட்டு | ... | 2 | 00 |
| திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் குறம் | ... | 1 | 00 |
| தோத்திரங்களும் பக்திப் பாடல்களும் | ... | 1 | 00 |
| ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் (ஸ்ரீ கிருஷ்ணமாரி ஸுப்ரபாதம்) | ... | 0 | 50 |
| ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் திருவருட் பிரசாதம் அரவணைக்கும் முறை | ... | 0 | 40 |
| மகாதேவி மகிமை | ... | 0 | 40 |
| நீதி நவமணி ஜோதி | ... | 0 | 40 |
| பஞ்சரத்தினம் | ... | 0 | 40 |
| பூஜா அகவலும் நவக்ரஹ தோத்திரமும் | ... | 0 | 40 |
| நவக்கிரக தோத்திரம் | ... | 0 | 15 |
| ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் துதிநிதி | ... | 0 | 30 |
| திருமாலை | ... | 0 | 35 |
| ஸ்ரீ முத்து வீரஸ்வாமி பஞ்சகம் | ... | 0 | 20 |
| சுகரஞ்சித கீதம் | ... | 0 | 15 |
| சதுர்த்தானந்த கீதம் | ... | 0 | 15 |
| ஸ்ரீ கிருஷ்ணமாரி அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரம் | ... | 0 | 15 |
| தோத்திரப் பாடல்கள் | ... | 0 | 50 |

